KALKI
24.2.85 ரூ.1-50

பரீட்சைக்குப் படிப்பது எப்படி?

# கல்கி



பெண்கள் பெறும் தொழிற்கல்வி
வீணாகிறதா?

இலவசம்

பளபளக்கும் ஸ்டெய்ன்லெஸ்
ஸ்டீல் கிண்ணம்

புதிய

# பால் அடங்கிய
# ஃபாரெக்ஸ்
# திட உணவு

இரண்டு டின்கள் வாங்கும்போது




புதிய ஃபாரெக்ஸ் அதிக சுவையானது
புதிய ஃபாரெக்ஸ் அதிக முழுமையானது

நீங்கள் பாசத்துடன் ஊட்டும் ஒவ்வொரு கவளமும்
உங்கள் பாப்பாவின் வளர்ச்சிக்குச் சிறந்ததாகும்.

இவ்வாய்ப்பு தேர்ந்தெடுத்த சில ஊர்களில் மட்டும்
விசேஷ டின்களின் மீது ஸ்டாக் உள்ளவரை வழங்கப்படும்.

உடல் நலத்தின் உறைவிடம் — கிளாக்ஸோ

CLARION/B/GX/5/203 TML

# பிடியுங்கள் பாராட்டுக்களை

## டி வி விமர்சனம்



டி. வி. நிகழ்ச்சிகள் என்றாலே, போர், அறுவை என்கிற ரீதியிலான விமர்சனங்கள் தான் பொதுவாக. ஒருசிலரிடம் எப்போதாவது, டி. வி.யைப் பாராட்ட வேண்டும் என்று தோன்றியதுண்டா? என்று கேட்டோம். அவர்கள் சொன்னார்கள்:

இரவு வழக்கமான நிகழ்ச்சிகள் முடிந்தபின், ஜப்பான், கொரியா, பிரான்ஸ் போன்ற அயல்நாட்டுப் படங்கள் போடுகிறார்கள். புரிந்து கொள்ள வசதியாய் சப் – டைட்டில்கள் வேறு. படங்கள் எல்லாம் ரியலி என்ஜாயபிள். ஆனால் ஒன்று. நேரங்கழித்து ஆரம்பிப்பதால், படம் பார்ப்பது, செகண்ட் ஷோ பார்ப்பது போல ஆகிவிடுகிறது. தூக்கம் கண்ணைச் சுழட்டுகிறது.

கே. வேணுகோபாலன்.



சில அயல்நாட்டு ஸ்போர்ட்ஸ் நிகழ்ச்சிகள், கிரிக்கெட் நேர்முக ஒளிபரப்பு – இவை நன்றாய் இருக்கின்றன. தவிர ஏசியாட், ஒலிம்பிக்ஸ் மற்றும் டென்னிஸ் மாட்சுகளின் நேர்முக ஒளிபரப்பு போன்றவற்றுக்காகத் தாராளமாய்ப் பாராட்டுக்களை அள்ளித்தரலாம் டி. வி.க்கு. சமீபத்திய 'சிவா' பற்றிய நிகழ்ச்சி ஏ ஒன்.

–பி. குறிஞ்சிவாணன்.



அத்திப் பூப்பதைவிட அபூர்வமாய்த்தான் நல்ல நாடகங்கள் போடுகிறார்கள். ஐயோ! அம்மா! அம்மம்மா.. போன்ற காமெடி நாடகங்களை, ரொம்பவும் ரசிக்கலாம். மேடை நாடகங்களை டி. வி.யில் போட்டால் நன்றாய் இருக்கிறது. டி. விக்கென்றே எழுதப்படுபவை...ஸாரி... அதைப் பற்றிச் சொல்ல விரும்பவில்லை. அதிலும் விதிவிலக்கு கம்பர் போன்ற ஒன்றிரண்டு.

எஸ். ராம்மோகன்.



ரசிக்கும்படியான த. வ. கார்ட்டூன்கள், அவ்வப்போது போடப்படுகிற 'அமேஸிங் ஃபாக்ட்ஸ்', கடம், பியானோ இணைந்து வழங்கப்பட்ட புதுமையான இசை நிகழ்ச்சி, மஹாநர் மகல் போன்ற விளம்பரதாரர் தயவில் நிகழ்ச்சிகள்... லிஸ்ட் சின்னதுதான். அதற்கு நான் என்ன பண்ண?

உமா சந்திரசேகரன்.



எலெக்ஷன் முடிவுகள் வெளியிடுவதில் டி. வி.யின் அபார சுறுசுறுப்பை நிச்சயம் பாராட்டத்தான் வேண்டும். நடுநடுவிலே சினிமா. தமிழ், ஆங்கிலத்தில் செய்திகள். இடையிடையே ஃபிளாஷ் செய்திகள். ஐந்து வருஷத்துக்கு ஒரு தடவையாவது படுசுறுசுறுப்பாய்ச் செயல்படுகிறார்களே! வெல்டன்!

எஸ். இந்திரா.

தொகுப்பு: ஜூலி

# ஒற்றர்கள் - ஓர் அலசல்

## எமக்குத் தொழில் உளவு நாட்டுக்குத் துரோகம் செய்தல்

உளவு பார்த்ததாகக் கைதானவர் பட்டியல், மதுராந்தகம் வேட்பாளர் பட்டியல் மாதிரி நீண்டு கொண்டு போவதைப் பார்த்து, மக்கள் அதிர்ச்சி அடைந்து வருகிறார்கள். மனைவி மக்களைப் பிரிந்து, கண் உறக்கமின்றி மலைப்பகுதிகளிலும் கடும் பனியிலும் எல்லையைக் காத்துவரும் படையினர் ஒருபுறம். ஐம்பதுக்கும் நூறுக்கும் ராணுவ ரகசியங்களை, மாலை வேளைகளில் மங்கையர் அணைப்புக்கும், விஸ்கி பாட்டில்களுக்கும் ஆசைப்பட்டு நூற்றுக்கணக்கான பிரதிகளை எடுத்து உலகின் முக்கிய நாடுகளின் தூதரக அதிகாரிகளுக்கு விற்றுவிட்டு, 'இப்படிச் செய்வது தவறு என்று எங்களுக்குத் தெரியாது!' என்று படு பாமரத்தனமாகச் சொல்லிவரும் பிடிபட்ட ஊழியர்கள் ஒருபுறம்...

### உளவு சொல்ல ஒருவன்

இந்தியாவைப் பற்றிய ரகசியங்கள் ஒன்று பாக்கியில்லை. எல்லாவற்றையும் நன்றாகச் சுரண்டி எடுத்துப் பரிமாறி விட்டார்கள் குமார் நாராயணனும் கூட்டாளிகளும். சில ரகசிய தஸ்தாவேஜுகளை நமது மந்திரி சபையினரே கூடப் பார்த்ததில்லையாம்! சில மந்திரிசபைக் கூட்ட முடிவுகள் அன்றன்றே கூட இந்த ஒற்றர்கள் மூலமாய் வெளியேறியதுண்டாம்! சாதாரண, சாலையோர போட்டோஸ்டாட் கடைகளில் பிரதிகள் எடுக்கப்பட்டு, ஆபீஸ் பையன் சர்வ சாதாரணமாக சைக்கிள் பின்னால் கட்டி எடுத்துக் கொண்டு செய்திப் பத்திரிகை விநியோகிப்பது மாதிரி, வேண்டியவர்களுக்கு விநியோகித்து வந்தானாம்.

பிரெஞ்சுக்காரர் அலெய்ன் போல்லி மாட்டிக் கொண்டு நாடு கடத்தப்பட்டதில் அமெரிக்க வட்டாரத்தில் குதூகலமும் கொக்கரிப்பும் தெரிகிறது. எடுத்ததற்கெல்லாம் ஸி. ஐ. ஏ. வைக் குற்றம் சாட்டிக் கொண்டிருந்தவர்கள் கொஞ்சம் இந்தக் கசப்பை விழுங்கிக் கொள்ள நினைத்தபோது, போலந்துக்கும், ரஷ்யாவுக்கும் — ஏன் கம்யூனிஸ நாடுகள் பலவற்றுக்கும் இந்த ரகசிய தஸ்தாவேஜுகள் தங்குதடை இல்லாமல் போய்க் கொண்டிருந்தன என்ற செய்தி வெளியாயிற்று! ஒரு ஸி. ஐ. ஏக்கு மூன்று கே. ஜி. பி. (ருஷ்ய உளவாளிகள்) வீதம் இன்று டில்லியில் இருக்கும் போது அவர்கள் விரலைச் சப்பிக் கொண்டு வேடிக்கையா பார்ப்பார்கள்?

### எதற்கும் ஒரு விலை உண்டு!

பிரதமர் இந்திரா உயிருடனிருந்தபோது தால் — வைஷேட் உர ஆலை பற்றிய ரகசியங்கள் வெளியான சமயம் நிறுவப்பட்ட விசாரணையில், ஓர் அதிகாரி வெளியிட்ட தகவல் இது:

| | |
|---|---|
| மதிப்பீட்டுக்கமிட்டி ரிப்போர்ட்: | ரூ.2,000 |
| செயலர்கள் குழுவின் நிகழ்ச்சிநிரல் | ரூ.1,000 |
| மந்திரிசபைக் கூட்ட நிகழ்ச்சிநிரல்: | ரூ.1,000 |
| காண்ட்ராக்ட் சம்பந்தமான ஒரிஜினல் ஃபைல் | ரூ.8,000 |
| விவசாயத்துறை அமைச்சகக் கூட்டத்தின் குறிப்பு: | ரூ. 500 |

ஏதோ மளிகைக்கடைப் பலகை அல்லது, பலகாரக்கடை விலைப்பட்டியல் மாதிரி, மேற்படி தஸ்தாவேஜுகளுக்கு நிர்ணயித்த விலைகள் இவை!

### சாட்டிலைட் சாதனைகள்

வியாபார உளவுகள் அல்லது கமர்ஷியல் எஸ்பியோனஜ் என்பவை உலகில் சர்வ சாதாரணம் என்றும், அவற்றோடு வாழக் கற்றுக் கொள்ள வேண்டும் என்பதும் இப்போதைய நிலை. தூதரகத்தில் இருந்து கொண்டு உளவு பார்க்கத் தெரியவில்லை என்றால் அவருக்கு ஐம்பது மார்க் கூடக் கொடுக்கலாகாது என்பதும் இன்றைய சித்தாந்தம். இந்த உளவுகளில் பெரும்பாலும் ராணுவத் தளவாடங்கள் விற்பனையே குறிப்பிடத் தக்கதாகக் கருதப்படுகிறது. ராணுவ தளவாடங்களை அல்லது அவற்றின் தயாரிப்புக்கான உதிரி பாகங்களை விற்பனை செய்வதில் தற்போது மேலை நாடுகளில் நிலவி வரும் போட்டாப் போட்டி மனப்பான்மையே, இத்தகைய உளவுப் பணிகளுக்கு முக்கிய காரணம். 'இவற்றால் ஒரு நாட்டின் பாதுகாப்பு ஒட்டு மொத்தமாகப் பாதிக்காது' என்கிறார் ஆர். டபிள்யூ ஜான்சன், சமீபத்திய 'கார்டியன்' இதழில். எப்படி? அவரே சொல்லுகிறார்:

''எலெக்ட்ரானிக் சாதனங்களும், சாடிலைட் அடிப்படையிலான கருவிகளும் இன்றைய உளவு வேலைகளில் பெரும் பங்கு வகிக்கின்றன. இவற்றில் மிக்க அசாதாரணமானது. அமெரிக்க சாடிலைட் போட்டோகிராபி. சோவியத் நாட்டிலுள்ள ஒரு கப்ப

வின் மிகச் சிறிய இரும்புப் பாகமான 'ரிவெட்'டைக் கூடத் துல்லியமாகக் காண்பிக்கும். ரஷ்ய வீதிகளில் செய்தித்தாள் வாசிக்கும் நபரின் கையிலுள்ள இதழின் தலைப்புச் செய்திகளை அப்பட்டமாக எடுத்துக் காண்பிக்கும். அமெரிக்க ராடார் கருவிகள், விண்வெளியில் இரண்டாயிரம் மைல்களுக்கப்பாலுள்ள கிரிக்கெட் பந்து அளவேயான பொருட்களைக் கூட அடையாளம் காட்டிவிடும். உதாரணம் சொல்கிறேன்: லிபியாவைச் சேர்ந்த இரண்டு மிக் விமானங்களை அமெரிக்க ஃபைட்டர் விமானங்கள் தாக்கிச் சிதறடித்த போது (1981—ல் சிட்ரா வளைகுடாவில்), இந்தச் செய்தி அமெரிக்க ஃபைட்டர் 'காக்பிட்'டிலிருந்து வெள்ளை மாளிகையை எட்ட ஒரு நிமிஷத்துக்கும் குறைவாகவே ஆயிற்று!''

திரு ஜான்சன் வெறும் சவடாலாக இதைச் சொல்லவில்லை. உளவு பற்றிய அரை டஜன் நூல்களை விமர்சனத்துக்காகப் படித்துப் பார்த்து, அக்கு வேறு ஆணி வேறாக அலசிய பிறகே இப்படிச் சொல்லுகிறார். எனவே ராணுவ தளவாடங்கள் தயாரிப்பது வாங்குவது விற்பது பற்றிய ரகசியங்களை உளவாளிகள் மூலம் அறிந்து கொள்வதில் வேற்று நாட்டு பாதுகாப்பு அமைச்சகத்தை விட பல்வேறு நாடுகளில் வியாபார நிறுவனங்களே அதிக அக்கறை காட்டுகின்றன!

## ஆள்பிடிப்பது எப்படி?

இந்த உளவு வேலைகளுக்கு எப்படி ஆள் பிடிக்கிறார்கள்? சற்று சுவாரசியமானதுதான் இந்தக் கேள்வி. செக்ஸ், பணத்தாசை, மது, போதை மருந்துகள், இதன் உடன் விளைவாக பிளாக்மெயில் இப்படிப் பல கொக்கிகள் மாட்டி இழுப்பார்களாம். எதில் சபலமோ, அதைக் காட்டி, வசமாகச் சிக்கிக் கொண்டதும் அதிலிருந்து மீளவே முடியாமல் கிடுக்கிப்பிடி போட்டு விடுவார்கள். நழுவ நினைத்தால் பிளாக்மெயில் பயமுறுத்தல்!

இதில் பண ஆசை மட்டுமே காரணமாக இருக்க முடியுமா? சில சமயம் ஊகிப்பது கடினம். ஸி. ஐ. ஏ. வுக்கு ராணுவ ரகசியங்களைக் கொடுத்து வந்ததாகச் சமீபத்தில் பிடிபட்ட லார்கின்ஸ் சகோதரர்கள் - மேஜர் ஜெனரல் லார்கின்ஸ்; ஏர் வைஸ் மார்ஷல் கென் லார்கின்ஸ் — இவர்கள் வெறும் பணத்திற்கு ஆசைப்பட்டா நாட்டைக் காட்டிக் கொடுத்திருப்பார்கள்? மேஜர் ஜெனரல் லார்கின்ஸ் பரம விசிஷ்ட சேவா மெடல் வாங்கியவர், திறமையான அதிகாரி. மனைவி இறந்தபோது, தனித்து இருந்த சூழ்நிலையை வெறுத்து, ஏதாவது 'த்ரில்' கிடைக்கட்டுமே என்று கூடச் செய்திருப்பாரோ?

## மூன் பே

தில்லியிலிருந்து வெளியாகும் மாதமிரு முறை இதழ் 'நியூஸ் மேக்;' ஜூலை 1982 இதழில் அதன் ஆசிரியர் டி. எம். சில்வேரா ஒரு கட்டுரை எழுதியிருந்தார். தலைப்பு: 'இந்த அரசின் ரகசியங்கள் விற்பனைக்குக் கிடைக்கும்'. கட்டுரையில் ஓரிடத்தில் எழுதியிருந்தார் சில்வேரா. 'பிரதமரின் அலுவலகத்திலிருந்து கிடைத்த தகவல்களின்படி, இங்கேயிருந்து முக்கிய பைல்களும், தஸ்தாவேஜுகளும் அனுமதி பெறாத பல அலுவலர்கள் மூலமாக வெளியே கொண்டு செல்லப்

படுகின்றன.' அப்போது இந்தக் கட்டுரையை யாரும் லட்சியம் பண்ணவே இல்லை. இப்போது அது நூற்றுக்கு நூறு உண்மை என்று நிரூபணமாகியுள்ளது. நம் ரகசியத் துறையைச் சேர்ந்த துப்புத் துலக்கும் அதிகாரிகள் எப்படிக் கண்ணை மூடிக் கொண்டிருந்தார்கள் இத்தனை நாளாக? இல்லை இந்த அதிகாரிகள் அத்தனை துப்பு இல்லாதவர்களா? என்றெல்லாம் செய்தித்தான் படிக்கும் சாதாரண மக்கள் கேட்கிறார்கள்.

அரசாங்க – ராணுவ ரகசியங்களை வெளியிட்டுப் பணம் பண்ணும் விவகாரம் இந்த அளவுக்கு பூதாகாரமாக இல்லாவிட்டாலும் முன்பே பல முறை நடைபெற்றுக் கொண்டிருந்ததுதான். நேருவுக்கு உதவியாளராக இருந்த எம். ஒ. மத்தாய் இந்தக் கலையில் கைதேர்ந்தவராயிருந்து நிறையச் சம்பாதித்தார் என்பதாக ஒரு குற்றச்சாட்டு இருந்தது. நேருவின் பார்வைக்கு இது கொண்டுவரப்பட்டதும், விசாரணைக்குழு நியமித்த போது, மத்தாய் ராஜினாமா செய்ததோடு விசாரணைக் குழுவும் கடையைக் கட்டி விட்டது!

ஒய். .பி. சவாண் வெளிவிவகாரத்துறை அமைச்சராயிருந்த சமயம், மஹாவீர் பிரசாத் என்ற அவரது உதவியாளர், ஜி. ஜே. ரெட்டி என்ற ஆந்திர பிஸினஸ் மேனுக்கு சகல ரகசியத் தகவல்களையும் விற்றுவந்தார் என்பதாகக் கருதிக் கைதானார். ரெட்டி ரஷிய அதிகாரிகளுடன் மிக நெருங்கிய தொடர்பு உள்ளவர். ரஷியாவுக்குப் புகையிலை ஏற்றுமதி செய்யும் வர்த்தகத் தொடர்பு இந்தியாவுக்கு உண்டு. ரகசிய தஸ்தாவேஜுகளைப் புகைப்படம் எடுக்கும்போது ஒன்றுக்கு மேற்பட்ட பிரதிகள் எடுப்பது டார்க் ரூம் அஸிஸ்டெண்ட் வழக்கமாம்! ஆக ஒரு நாட்டுக்கு மட்டும் ரகசியங்கள் விற்கப்படுவதில்லை. பிரதிகள் வேறு பல நாடுகளின் ஒற்றர்களுக்கும் போய்ச் சேர்கின்றன. பெரிய வியாபாரத்துக்குள் ஒரு சின்னத் துணை வியாபாரம்!

**மேலிடத்து ஊழல்...**

'தன்னிச்சைப்படி செயல்பட்ட பிரதமர் இந்திராகாந்தியின் அலுவலகத்தில், அவரது உதவியாளர்கள் அசாத்திய அதிகாரம் படைத்திருந்தார்கள். இவர்களிடம் ரகசியப் புலனாய்வுத் துறையினரும், போலீசும் கூட நெருங்க அஞ்சியிருந்தனர். இப்படிப்பட்ட ஒரு நிலையில் மோசடியும், திறமையின்மையும் வெகு சுலபமாகச் செலாவணி ஆயிற்று போலும்' என்கிறது 'நியூஸ் வீக்.' ''மேலிடத்தில் ஊழல் இருந்தால், கீழ்மட்டத்தில் நாணயத்தை எப்படி எதிர்பார்க்க முடியும்?'' என்ற 'இந்து' தலையங்கத்தைக் குறிப்பிட்டிருக்கிறது இந்த அமெரிக்க வார இதழ்.

'உளவுக்கும் தொழிலுக்கும் வந்தனை செய்வோம்' என்று யாரோ இவர்களிடமெல்லாம் போய்த் தப்பாகப் பாடிவிட்டார்கள் போலிருக்கிறது!

தொகுப்பு : சாருகேசி

கார்டூன் நன்றி: சுதிர் தர்
ஹிந்துஸ்தான் டைம்ஸ்

''ஒரே ஒரு வசனம்தான் பேசினேன்... என் காதலர் கோபித்துக் கொண்டு போய் விட்டார்.''

''அப்படி என்னடி பேசினே?''

''காதலிப்பதில் நீங்க ஒரு எல். கே. ஜி. நான் பி. ஹெச். டி. பட்டம் பெற்றவள் என்றேன்... இது தப்பா?''





பண்டைய கிரேக்க நாட்டில் முப்பது வயதுக்குமேல் யாராவது பிரம்மசாரியாக இருந்தால், அவரைப்பிடித்துச் சிறையில் போட்டுவிடுவார்களாம்.

—நீலா.

# பெண்கள் பெறும் தொழிற்கல்வி வீணாகிறதா?

இவ்விதழ் மேலட்டையில் இடம் பெற்றுள்ள **குமாரி பிரதிபா** போலவே ஏராளமான பெண்கள் இன்று தொழிற்கல்வி மேற்கொள்கின்றனர். அதில் சிறந்தும் விளங்குகின்றனர். ஆனால் படித்துப் பட்டம் பெற்ற பின்னர், 'தொழிலா, குடும்பமா?' என்ற பெரிய பிரச்சினைக்கும், குழப்பத்துக்கும் இவர்களில் பெரும்பாலோர் ஆளாவதைக் காண முடிகிறது. ஏராளமான பெண்கள் குடும்பத்தைக் கவனிக்க வேண்டும் என்பதற்காகத் தொழிலை அடியோடு விட்டுவிடுகின்றனர். அப்படி விட்டு விடுவதால் நாட்டுக்கு நஷ்டம் என்பது மட்டுமல்ல; அந்த இடத்தில் வேறு ஒரு ஆண்மகனுக்கு இடம் கிடைத்திருந்தால் அவன் படித்துத் தேறித் தொழில் நடத்துவானல்லவா என்ற நியாயமான கேள்வியும் எழுகிறது. எனவே, தொழில் கல்விக்கு ஆசைப்பட்டு மனுச் செய்யும் முன்னரே நம் எதிர்காலம் என்ன என்பதை நன்கு யோசித்துத் தீர்மானித்துக் கொண்டு அதில் உறுதியாக நிற்பது தான் பெண்களுக்கு அழகு.

தொழில்புரியும் சில பெண்மணிகளை அணுகிப் பேசியபோது அவர்களில் பலரது மனங்கள் தொழிலுக்கும், குடும்பத்துக்கும் இடையில் ஊசலாடி ஓரளவு அல்லல்பட்டும் வருவதை உணர முடிந்தது. ஆனால் அதேநேரத்தில் தொழில் துறையில் ஈடுபட்டுள்ள ஒருத்தியைப் புரிந்து கொண்டு அன்பு செலுத்தும் கணவனும் குழந்தைகளும் இருந்துவிட்டால் அவளால் சாதிக்க முடியாதது இல்லை என்பதும் புரிந்தது!

**டாக்டர் (திருமதி) சுசீலா சாம்பமூர்த்தி,**
(தனியார் மருத்துவமனை, சேத்துப்பட்டு):

திருமணம் செய்துகொண்டு, இந்தத் தொழிலையும் செய்வது என்பது பெரிய சர்க்கஸ்தான். எவ்வளவுதான் நாம் சிரமப்பட்டு வீட்டில் எல்லாவற்றையும் கவனித்துக் கொண்டாலும் குழந்தைகளுக்கு மற்றவர்களுடைய தாயைப்போல் தன் அன்னை பள்ளிக்கூடத்துக்கு வருவதில்லையே, வீட்டில் நாம் விரும்பும் பொழுதெல்லாம் அம்மா உடன் இருப்பதில்லையே என்ற குறைகள் இருக்கத்தான் செய்கின்றன. திருமணத்துக்குப் பிறகு தொழிலையும் வைத்துக் கொண்டிருப்பவர்களுக்குக் குடும்பத்தில் உள்ள அனைவரும் ஒத்துழைத்தால்தான் மனநிம்மதி இருக்க முடியும். எங்கேயாவது போவதாகத் தீர்மானித்திருப்போம் — அப்பொழுது பார்த்து அவசரக் கேஸ் வரும். குடும்பத்தில் மற்றவர்கள் கோபப்படாமல் இருக்க வேண்டும். அதுதான் முக்கியம். சிரமம்தான். ஆனால் ஏராளமாய்ச் செலவழித்து இவ்வளவு கஷ்டப்பட்டுப் படித்து விட்டுத் தொழிலைவிட்டு விடத்தான் முடியுமா?

**திருமதி எஸ். ஜெயலக்ஷ்மி,**
(ஜூனியர் என்ஜினியர், டெலி கம்யூனிகேஷன்ஸ், சென்னை).

தொழிற்கல்வி படிக்கப் பெண்களுக்குத் திறன் நிறையவே இருக்கிறது. அவர்கள் மிகவும் வெற்றிகரமாகவும் திகழ முடிகிறது. ஆனால் வீட்டைப் பார்த்துக் கொள்வது என்ற பணியோடு இதையும் செய்வது மிகவும் கஷ்டம். காலை பத்து முதல் மாலை ஐந்து வரை செய்யும் வேலையாக இருந்தால் ஒருமாதிரி சமாளிக்கலாம். ஷிப்டுகள் — இரவு நேர வேலை — ஊர்விட்டு ஊர் மாறுதல் — போன்றவைகளைச் சமாளிக்க முடிவதில்லை. பதவி உயர்வே வேண்டாம். இருக்கும் இடத்திலிருந்து மாற்றுமல் இருந்தால் சரி என்றுதான் தோன்றுகிறது. பணம் மட்டும் மன அமைதியைத் தந்து விடாதே! தொழிலும் முழுநேர வேலை; வீட்டுத் தலைவி என்பதும் முழுநேர வேலை. ஆக எப்படி இரண்டையும் கவனிப்பது? வீட்டு வேலைக்கு ஆள் வைத்துக் கொள்வதாலோ, உறவினர் உதவியை நாடுவதாலோ பிரச்னை தீராது. பெண்களுக்குள்ள இந்த சிரமத்தைப் புரிந்து கொண்டு அனுதாபத்துடன் ஒத்துழைக்கும் கணவனும் மற்றவர்களும் குடும்பத்தில் இருந்தாலன்றிப் பெண்களுக்குத் தொழிற்கல்வியும் வேலைக்குப் போவதும் வேதனையாகத் தான் முடியும்.

—பேட்டி: **குயிலி**

மேலட்டை வண்ணப்படம்: **உத்ரா**



வானவில்லின் வர்ண ஜாலம் போல பலவித ஆர்வங்களை வளர்த்துக் கொண்டவர் பிரதிபா. 1. பரத நாட்டியம், 2. யோகாசனம், 3. ஆங்கிலக் கவிதை எழுதுதல், 4. விளையாட்டுக்கள் — குறிப்பாக மலை ஏறுதலில் எடின்பரோ கோமகன் பெயரால் வழங்கப்படும் பல மெடல்களைப் பெற்றவர். 5. ரங்கோலி 6. சமையல்கலை... இத்தனையும்போதாதென்று ஏழாவது வண்ணமாசப் பொறி இயல் கல்லூரியில் சேர்ந்து எலெக்ட்ரானிக்ஸ் பிரிவில் தேர்ச்சி பெற்று வருகிறார். இவ்விதழ் மேலட்டையிலும் வண்ண மயமாகத் திகழ்கிறார்.

# பரீட்சைக்குப் படிப்பது எப்படி?



பக்கத்துப் பக்கத்து வீடுகளில் ஒரு பையனும், ஒரு பெண்ணும். பையன் பள்ளிக்கூடத்திலிருந்து வீட்டுக்கு வந்ததும் பையைக் தூக்கிப் போட்டுவிட்டு வெளியே விளையாடப் போய் விடுவான். இரவில் கொஞ்ச நேரம் அம்மா ஏதாவது திட்டப் போகிறாளே என்பதற்காகப் புத்தகத்தைப் புரட்டுவதோடு சரி.

அந்தப் பெண் எப்போது தூங்குவாள் என்பதே தெரியாது. மழைக்காலத் தவளை மாதிரி எப்போதும் இரைந்து படித்துக் கொண்டே இருப்பாள். பையனுக்கு அவள் பெரிய இடைஞ்சல். யமன்... சனியன்... தொண தொணப்பு... இப்படி அவன் அருவருப் படையக் காரணம் அவள் இப்படிப் படித்துத் தொலைக்கிறாளே என்கிற பொறாமை இல்லை. அவளைச் சுட்டிக் காண்பித்து அவனுடைய அம்மா இவனை மிரட்டுவதுதான்.

''பொண் குழந்தை... படிச்சுப் பாஸ் பண்ணிடப் போறா. நீ பகலெல்லாம் ஊரைச் சுத்திட்டு முட்டை வாங்கப் போறே'' என்று அம்மா திட்டும் போதெல்லாம் அவனுக்கு அந்தப் பக்கத்து வீட்டுப் பெண் மீது பழியாய்க் கோபம் வரத்தானே செய்யும்?

ஆனால் நடப்பது வேறு. தவளைத்தனமாகப் படித்த பெண் முட்டை வாங்குவாள். பையை உதறிவிட்டுத் தெருவில் விளையாடப் போன பையன் முதல் வகுப்பில் தேர்ச்சி பெறுவான். ''இப்போ என்னம்மா சொல்றே?'' என்று அவன் வந்து நிற்கும் போது அம்மாவுக்கு வாயெல்லாம் பல்.

தவளைத் தனமான படிப்பினால் மட்டும் பாடம் மனசில் ஏறிவிடாது. வகுப்பறையில் ஆசிரியர் பாடம் நடத்துகிற போது நுணுக்கமாகக் கவனிப்பது மட்டுமே பலருக்குப் போதுமானதாக இருக்கிறது. வீட்டிலும், தேர்வுக்குச் சில நாட்கள் முன்னால் புத்தகங்களைப் புரட்டிப் பார்ப்பது போதுமானதாய் இருக்கிறது.



ஒரு மாணவர் கேட்கிறார்: ''நாவல்களையோ, கதைப் பத்திரிகைகளையோ சத்தம் போட்டா படிக்கிறோம்? இன்வால்வ்மெண்ட் இருந்தால் தானே விஷயம் மூளையில் பதியும் இல்லையா?''

இந்த இன்வால்வ்மெண்ட்டை எப்படிச் செம்மையாகப் பெறுவது என்பதே முக்கியமான பிரச்னை. அந்தக் காலத்தில் சொல்லி வைத்தார்கள்; ''கற்றலில் கேட்டலே நன்று'' என்று. வருஷக் கணக்கில் உருப்போட்டால் கூட ஏறாத பாகவதம், பாரதம், ராமாயணக் கதைகளையும் பாத்திரங்களின் பெயர்களையும், பிரவசனங்கள் உபந்நியாசங்களைக் கேட்டே நம் வீட்டுப் பாட்டிமார்கள் நினைவில் வைத்துக்கொள்கிறார்களே! அந்த விஷயத்தில் அவர்களுக்குள்ள ஈடுபாடுதான் காரணம்.

### எழுதிப்பார்

பத்துத் தடவை படிப்பதைவிட ஒரு முறை எழுதிப் பார்ப்பது விஷயங்களை நன்றாக மனசில் பதிய வைக்கும் என்பது ஒரு சுலபமான ஆலோசனை. ''ஒரு பாடம் இரண்டு பாடம் என்றால் எழுதிப் பார்க்கலாம். மனப்பாடம் பண்ணலாம்... கழுதைச் சுமையாய்ப் பாடங்கள் சேர்ந்து விட்ட இன்றைய நிலையில் மனப்பாடம் பண்ணுவது என்பது சாத்தியமே இல்லை'' என்கிறார் ஒரு மாணவர்.

இப்படி எழுதுவதிலும் ஈடுபாடு முக்கியம். ஊர் விஷயங்களில் மனசை அலையவிட்டுக் கொண்டு கடனே என்கிற மாதிரி ஸ்ரீராம ஜெயம் எழுதுகிற பேர்வழிகளைப் போல், இன்வால்வ்மெண்ட் இல்லாமல் எழுதுவதும் படிப்பதும் பலன் தராது என்பதை நிறையப் பேர் தெரிந்து வைத்திருக்கிறார்கள்.

பி.பார்ம் படிக்கிற மாணவர் எஸ். ரவிசங்கர் எதிலுமே முதல் இரண்டு 'ராங்க்' பெறுகிறவர். இவரிடம் ஒரு வித்தியாசமான பழக்கம். டேப் ரெகார்டர் அல்லது ரேடியோ பாடிக் கொண்டே இருக்கும். அவற்றை ரஸித்துக் கொண்டே மௌனமாகப் பாடங்களைப் படித்துக் கொள்வார். ''இது எப்படி? கவனம் சிதறாதா?'' என்று கேட்டால், சிரிக்கிறார். சங்கீதம் மாதிரி படிப்பு... பக்கவாத்தியம் மாதிரி இசை. எப்படியானாலும் பாடத்தில் உள்ள ஈடுபாடு, இந்தக் கவனச் சிதறலை வென்று விடுகிறது.

கணக்கெடுப்பாகக் குறிப்பிட்ட சில மாணவர்களிடம் சில கேள்விகளைக் கேட்டுப் பார்த்தோம். 'ஸாம்பிள் ஸர்வே' என்று இதைச் சொல்லிவிட முடியாது. சென்னையில் உள்ள மாணவர்கள் பலரிடம் எடுக்கப்பட்ட மதிப்பீடு இது. நாற்பது சத




வீதத்துக்கு மேல் வகுப்பறைக் கவனிப்புக்கே முக்கியத்துவம் தருகிறார்கள் என்று தெரிகிறது.

**என்னென்ன பிரச்னைகள்:**

இப்படி ஈடுபாட்டோடு பாடம் கேட்க முடியாமல் வீட்டில் வந்து புத்தகங்களைப் புரட்டுவதால் ஒருவிதமான பயம் ஏற்படுகிறது. நம்முடைய கணக்கெடுப்பின்படி பத்துக்கு மூன்று பேர் என்கிற விதத்தில் தேர்வுகளில் பயம் ஏற்படுகிறது என்கிற வகையைச் சேர்ந்தவர்களாக இருக்கிறார்கள்.

என்னென்ன விதமான பிரச்னைகளை, தேர்வுகளின் போது மாணவர்கள் நேர்கொள்ள வேண்டி வருகிறது?

—என்னதான் படித்தாலும் உருப்போட்டாலும், தேர்வு அரங்கில் நுழைந்து வினாத்தாள்களைக் கையில் வாங்கியவுடனே எல்லாம் மறந்து போய் விடலாம்.

—மாணவர்கள் படித்தது வேறு, கொஞ்சமும் சம்பந்தமில்லாத விஷயங்களாக வினாத்தாள்களில் வருவது வேறு என்று குழப்பம்.

—எவ்வளவுதான் சிறப்பாகத் தன்னம்பிக்கையோடு தேர்வு எழுதியிருந்தாலும், மதிப்பெண் தருகிற மகானுபாவன்கள் குறைத்துப் போட்டுவிட்டார்கள் என்கிற எண்ணம்.

—வீட்டில் எத்தனையோ பிரச்சினைகள் இருக்கும். குடும்பச் சுமை நினைவுக்கு வரலாம். தேர்வு நன்றாக எழுத வேண்டும் என்பதில் உள்ள கவனம் போய்விடலாம்.

பலருக்கு ஒவ்வொரு தேர்வுமே வாழ்க்கைப் பிரச்சினைதான். 'மார்ச் போனால் செப்டம்பர்' என்கிற பொறுப்பற்ற மனப்பான்மை இப்போது வெகுவாய் மாறியிருக்கிறது.

**பாடங்களில் வருகிற சந்தேகங்கள்:**

வகுப்பறையில் பாடம் நடந்து கொண்டிருக்கிறது. ஆசிரியர் தருகிற விளக்கத்தை மாணவனால் புரிந்து கொள்ள முடியவில்லை. ஆசிரியரிடம் தன்னுடைய சந்தேகத்தைக் கேட்டுத் தெளிவுபடுத்திக் கொள்ளத் தயங்குகிறான். இந்தத் தயக்கத்துக்கு மூன்று காரணங்கள் சொல்லப்படுகின்றன.

1. இவ்வளவு மாணவர்களுக்கு மத்தியில் தான் மட்டும் புரியவில்லை என்று கேட்டால் சக மாணவர்கள் கேலி பண்ணுவார்களோ என்கிற தாழ்வு மனப்பான்மை.

2. உற்சாகமாகப் பையனின் சந்தேகத்தைக் கேட்டு விளக்கம் தருவதற்குப் பதிலாக ஆசிரியரே இவன் மீது எரிந்து விழலாம்... ''இவ்வளவு பேருக்கும் சந்தேகம் வரல்லே... ஒனக்கு மட்டும் வருதோ... பாடம் நடத்தறப்போ கவனிக்காமெத் தூங்கி விழுந்தியா...'' என்கிற மாதிரி.

3. இன்னும் சில நேரங்களில், ஆசிரியர்களே சரியான தயாரிப்பில்லாமல் வகுப்புக்கு வந்து, பையன் இயல்பாகக் கேட்பதைக் கூட விளக்க முடியாமல் திணறும் நிலை ஏற்பட்டு மாணவர்களைக் கடிந்து கொள்ளலாம்.

தரமான பள்ளிகள் என்கிற அமைப்புக்களில் இந்தக் கோளாறுகளுக்கு இடமிருப்பதில்லை. மாணவர்கள் சந்தேகங்களை உடனுக்குடன் கேட்டுத் தெளிவு பெற வேண்டும் என்பதையே நல்ல ஆசிரியர்கள் விரும்புவார்கள். முகம் சுளிக்காமல் தட்டிக் கொடுத்து மாணவனின் அச்சத்தைப்போக்கி வழிகாட்டுவார்கள். மாணவர் —ஆசிரியர் உறவு முறையில் இந்த மாதிரியான இணக்கம் ஏற்படுவது ஆரோக்கியமான கல்வியைத் தருகிறது.

அவ்வப்போது படித்த பாடங்களை ரிவைஸ் பண்ணிக் கொள்ள வேண்டும். பரீட்சை நேரத்தில்தான் தொடுவது என்று இருந்தால் காலை வாரி விட்டுவிடும். பசுமை மாறாமல், வகுப்பில் பாடம் கேட்டதை உடனே பார்த்து வைக்க வேண்டும். இதனால் நினைவில் நன்கு பதியும். 'பசுமரத்து ஆணி மாதிரி.'

**அகராதி புரட்டுகிற பழக்கம்:**

இது மிகவும் முக்கியம்... அவ்வப்போது சின்ன சந்தேகம் வந்தாலும் சோம்பல் படாமல் அகராதியைப் புரட்டிப்பார்ப்பது நல்லது. இதற்கு வயது வரம்பே இல்லை. எழுபது வயதான கிழவர்கள் கூட டிக்ஷ



னரியைப் புரட்டுவார்கள். அதில் ஒரு சுகம் இருக்கிறது. புதிய வார்த்தைகளைத் தெரிந்து கொள்வது தவிர, ஏற்கெனவே தெரிந்த சொற்களுக்கும் வேறு வேறு பொருள்கள் இருப்பது புரிய வரும்.

## பட்டப்படிப்புவரை பரீட்சைகளே வேண்டாம்!

''முதல் பட்ட வகுப்பு வரை மாணவர்களுக்குத் தேர்வுகளில் ''தோல்வி' என்பதே இருக்க வேண்டியதில்லை. ஒழுங்காக வகுப்பை முடிக்கும் எல்லோருமே தேர்ச்சி பெற்றவர்கள் என்று அறிவித்து, மிகவும் உயர்தரமாக எழுதுகிறவர்களுக்கு மட்டும் 80, 90, 100 என மார்க் வழங்கி 'டிஸ்டிங்ஷன்' தரலாம். எல்லா வேலைக்குமே டிகிரி அவசியம் என்பது சரியில்லை. வங்கிகளோ, மருத்துவமோ பொறியியலோ எதுவானாலும் அந்தத் துறையில் இவன் தேறுவானா என்பதைப் பரிசோதிக்கத் தனித்தனியாகத் தேர்வுகள் நடத்திச் சேர்த்துக் கொள்ள வேண்டும்'' என்கிறார் ஒரு ஓய்வு பெற்ற பேராசிரியர்.

''ஏதோ பட்டம் வாங்கி விட்டால் உடல் வருந்த வேலை செய்ய வேண்டாம் என்று ஒரு மனப்பான்மை பரவி விட்டது. டிகிரி படித்தால் சர்க்கார் வேலை கிடைக்கும் என்கிற எண்ணமும், வேலைப்பாதுகாப்பு இருக்கும் என்கிற சபலமும்தான் வெள்ளைக்கார ஆதிக்க காலத்திலிருந்து நாம் சுற்றுக் கொண்டிருக்கிறோம். கேரள மாநிலத்தில் பட்டம் வாங்கியவர்களெல்லாம் பஸ் டிரைவராக, கண்டக்டராக வேலைக்கு வந்துவிட்டார்கள். 'செமி டெக்னிகல்' வேலைகளில் பயிற்சியளித்து நம்முடைய இளைஞர்களை மேம்படுத்த வேண்டும்.

''பொரிகை பிடித்துக் கூடுதலாக மதிப்பெண் பெறுவது என்பது இப்போது மட்டும் உள்ள செய்தியல்ல. ஆண்டாண்டுக் காலமாக உள்ள விவகாரம். முன்பெல்லாம், அபூர்வமாக நடக்கும். இப்போது மாணவர் எண்ணிக்கை; தேர்வுத்தாள் திருத்துகிறவர்களின் எண்ணிக்கை இரண்டுமே பல்கிப் பெருகிவிட்டதால் இரகசியங்களைக் காப்பாற்ற முடியவில்லை. பழக்கம் பரவலாகி விட்டது. முன்னெல்லாம் இப்போது மாதிரி 'பேப்பர் இங்கே போகிறது' என்கிற விவரத்தைத் தெரிந்து கொள்ளவே முடியாது.

''ஆசிரியர்கள் பாடம் நடத்துகிறபோது ஒவ்வொரு பகுதியும் நடைமுறை வாழ்க்கையில் எப்படிப் பொருந்தி வருகிறது என்கிற தொடர்பை மாணவர்களுக்கு விளக்கினால், அவர்கள் பாடத்தை மனத்தில் பதியவைத்துக் கொண்டு தேர்வுகளில் பயப்படாமல் எழுத முடியும்.

''மாணவர்களும், ஏதோ பள்ளிக்கு வந்தோம், படித்தோம், போனோம் என்றில்லாமல் பொது அறிவை வளர்த்துக்கொண்டு முன்னேறப் பாடுபட வேண்டும். ரேடியோ, டி.வி; பத்திரிகைகள் ஆகியவற்றில் உயிரை ஒதுக்கிப் பொதுஅறிவு பூர்வமான பகுதிகளில் கவனம் செலுத்த வேண்டும். இவை தேர்வுகளுக்கு மட்டுமில்லாமல் வாழ்க்கைக்கும் கைகொடுக்கும்.

''வினாத் தாள்கள் தயாரிப்பிலும் முக்கியமாகக் கவனிக்க வேண்டியவை உள்ளன. மிகவும் கூர்மையான அறிவுள்ள மாணவனுக்குத் தன்னுடைய திறமையை வெளிப்படுத்த வாய்ப்புத் தருகிற மாதிரி நுணுக்கமான கேள்விகளும் வினாத்தாள்களில் இடம் பெறலாம். சராசரியான மாணவன் அந்தமாதிரிக் கேள்விகளின் பக்கமே போகாமல் தனக்கு ஏற்ற கேள்விகளைப் பொறுக்கிக் கொண்டு எழுதும் வகையிலும் வினாத்தாள்கள் அமைய வேண்டும்.''

## இருபது பக்கம் படித்தால் பாஸ்!

''தேர் இழுக்கிற மாதிரி தான் கல்வியும். ஆசிரியர், மாணவன், பெற்றோர் என்று மூன்று தரப்பாரும் ஒத்துழைக்க வேண்டும்'' என்கிறார் தலைமை ஆசிரியர் வி. எஸ். குமரன். ''சினிமாவும் தொலைக்காட்சியும் பையனுடைய படிப்பைக் கெடுக்கும் என்பதை நான் ஒப்புக் கொள்ள மாட்டேன். இவை காலத்தின் கட்டாயங்கள். இவற்றுக்கு இடையில் நீந்திச் சமாளித்துத்தான் அவன் கரையேற வேண்டும்.

''தேர்வுகளில் மதிப்பெண் வாங்குவது என்பது பிரச்சினையே இல்லை. பையனுக்கு அக்கறை வேண்டும். தன்னம்பிக்கை வளர வேண்டுமானால் சோம்பல் படாமல் வகுப்புத் தேர்வுகளை அவன் எழுதியே ஆகவேண்டும். வைக்கப்படுகிற வகுப்புத் தேர்வுகளை ஆசிரியர்கள் அவ்வப்போது மதிப்பீடு செய்து, பையன் செய்துள்ள தவறுகளைச் சுட்டிக் காட்டித் திருத்த முயல வேண்டும். இதைச் செய்ய முடியா விட்டால் 'டெஸ்ட்' என்று எதற்காக வைப்பது?

''அறிவியல் என்று ஒரு பாடம். 320 பக்கப் புத்தகம். இதில் இருபதே பக்கங்களை மட்டும் அந்தப் பையன் படித்து விட்டால் போதும். மண் என்று ஒரு பாடம் எட்டுப் பக்கம் இருக்கும். வாயு தயாரிப்பு என்று ஒரு பாடம் ஆறு பக்கம் இருக்கும்... தாதுக்கள் உப்புக்களைப் பிரித்தெடுப்பது பற்றி ஒரு பாடம் இருக்கும். ஆறு பக்கம். எப்படியும் இந்த இருபது பக்கங்களில் மூன்று கேள்விகள் வந்துவிடும். வெகு சுலபமாகத் தேர்ச்சிக்கு வேண்டிய முப்பத்தைந்து மார்க் வாங்கிவிடமுடியும்.

---

அவன்: ''ஏன்டா அசோக்... உன் அப்பா 'ஜோக்' எழுதுகிறவராச்சே... உன்னை எப்படிடா கூப்பிடுவா?''
இவன்: '' 'அஜோக்'குன்னு!''

—அ. வசந்தா.



ஆனால் இந்த அளவுக்குக் கூட அக்கறை எடுத்துக் கொள்ளாத மாணவனை என்ன சொல்வது? ''ஒரு மார்க் குறைவு. அதனால் தோல்வி என்கிற நிலையெல்லாம் இப்போது இல்லை. விடைத்தாள்களைத் திருத்துகிற வட்டாரத்தில், பையனுக்கு எப்படியாவது கூடுதல் மார்க் வழங்கி அவனைக் கடைத்தேற்ற வேண்டும் என்றே திட்டமிட்டு முயல்கிறார்கள். மிகவும் மோசமான கேஸ்கள் தான் தோல்வியடைகின்றன.

''அடுத்தவனைப் பார்த்துக் காப்பியடிப்பது என்று ஒரு பழக்கம். ரொம்பவும் மோசமான மக்குப் பையன் தான் காப்பியடிக்கிறான் என்பதில்லை. எழுபது மார்க் வாங்குகிறவனும் காப்பியடிக்கிறான். இருபது மார்க் கூட வாங்க முடியாதவனும் காப்பியடிக்கிறான். இன்னும் கொஞ்சம் கூடுதலாய் மதிப்பெண் கிடைக்காதா என்கிற சபலம்தான்.

''காப்பியடிப்பது என்பது ஒரு தொற்று நோய் மாதிரி. இருபது பேர் தேர்வு எழுதுகிற அறையில் ஒரு மாணவன் காப்பியடிக்கத் தொடங்கினால் மடமடவென்று மற்றவர்களிடமும் பரவிவிடுகிறது. இதில் இன்னொரு அபாயமும் உண்டு. காப்பியடிக்கிற பரபரப்பில், எங்கே அகப்பட்டுக் கொண்டுவிடுவோமோ என்று உள்ளூர எழுகிற பயத்தில் அவனுக்கு உள்ள திறமையும் போய்விடுகிறது!

''ட்யூஷன் வேண்டாம். வீட்டில் பெற்றவர்கள் சொல்லித்தர முயல்வது கூட வேண்டாம். மாணவன் தானே முயன்று படிப்பது தான் பலன்தரும்.

''இன்னும் ஒரு கோளாறு. மொழிப் பாடங்களைத் தவிர மற்றப் பாடநூல்களின் விலையை விட அவற்றுக்குக் கடைகளில் கிடைக்கிற நோட்ஸ்களின் விலை குறைவாக இருக்கிறது. நிறையப்பேர் பாடப் புத்தகங்களை வாங்குவதை விட்டுவிட்டு நோட்ஸ் வாங்கி விடுகிறார்கள். இவர்கள் வகுப்பைப் பற்றியும், ஆசிரியர் கற்பிப்பதைப் பற்றியும் கவலைப்படுவதே இல்லை!''

## மூளை ஒரு நூலகம்

''மூளை என்பது ஒழுங்கான லைப்ரரி மாதிரி பயன்படக் கூடியது'' என்கிறார் டாக்டர் எம். எஸ். .வேங்கடராமன்.

''படிக்கும்போது ஒவ்வொரு பாடத்தையும் சிறுசிறு தலைப்புக்களில் பகுத்துக் கொண்டு படிக்க வேண்டும். கண்டமேனிக்கு எல்லாவற்றையும் குழப்படியாகப் படிக்கும் போது அவை நினைவில் பதிவதில்லை. நூலகத்தைப் பாருங்கள். ஒரு பக்கம் வரலாறு, ஒரு பக்கம் கதைகள், ஒருபக்கம் மொழியியல் என்று பிரித்து அடுக்கித் தேவையானதை உடனுக்குடன் எடுக்கிற மாதிரி வைப்போம். எல்லாவற்றையும் ஒன்றாகக் குவித்துப் போட்டால் எதை எப்படி இனங்கண்டு கொள்வது? மூளையில் பதிய வேண்டிய விஷயங்களையும் இப்படித்தான் சிறு தலைப்புக்களாகப் பிரித்துப் பிரித்துப் படித்து நினைவில் தேக்கிக் கொள்ள வேண்டும்.

''ராமாயணக் கதையை நினைவு வைத்துக் கொள்கிற மாதிரி மகாபாரதத்தை நினைவில் தேக்கிக் கொள்வது முடியாது. காரணம், முன்னதில் பாலகாண்டம் அயோத்யா காண்டம் என்று ஒழுங்கான Classification இருக்கிறது. பாரதம் அப்படியில்லை. ஒரே நிகழ்ச்சிகளின் குவியல் அது.

''நினைவாற்றலை மாத்திரை மருந்துகள் மூலம் வளர்த்துக் கொள்ள முடியாது. மெமரி பில்ஸ் என்பதெல்லாம் கத்தக் குப்பை. மனோதத்துவ ரீதியில் வேண்டுமானால் பலன் கிடைக்கலாமோ என்னவோ, மருந்துகளால் நிச்சயமாக இல்லை.

''புத்தகத்தை எடுத்தால் தூக்கம் வருகிறது. களைப்பாக இருக்கிறது என்றால் பையன் தூங்கட்டும். காலையில் சீக்கிரம் எழுப்பிவிடுங்கள். புழுக்கமான இடம் சோர்வாக இருக்கிறது என்றால் மொட்டை மாடி மாதிரிக் காற்றோட்டமான இடத்தில் போய்ப் படிக்கப் பழகட்டும். இயற்கையான சூழ்நிலைகளிலேயே திறமையான நினைவாற்றலுக்கு வழி கிடைக்கும்.

''இன்றைய கல்வி முறையில் அக்பர் எந்தத் தேதியில் பிறந்தார் என்கிற மாதிரி தேவையில்லாத விஷயங்களைத் திணித்துக் கொண்டு மாணவர்கள் அவதிப்படுகிறார்கள். கம்ப்யூட்டர் மயமாக நாடு விரைவிலேயே ஆகிவிடப்போகிறது.' அப்போது யதார்த்த முறையிலான வேறு கல்விமுறை வந்து தானே தீரவேண்டும்?''

## திறமையின் அளவுகோல்....

திருமதி கே. சரஸ்வதி சொல்கிறார்:

''பையனுடைய திறமையைத் தேர்வுகளை மட்டும் வைத்து எடைபோடக் கூடாது. அவன் வளர்கிற வீட்டுச்' சூழலைக் கவனிக்கவேண்டும். அப்பா, அம்மாவுக்குள்ளே சச்சரவுகள், வீட்டில் யாருக்காவது மோசமான உடல்நிலை, இந்தச் சூழலில் படித்துத் தேர்வு எழுதுகிற மாணவனின் மனநிலை பாதிக்கப்படத்தான் செய்யும்.

''உருப்போடுவது கேவலம் என்கிற நிலை தவறு. கம்ப்யூட்டர், கால்குலேட்டர்கள் என்று அறிமுகம் செய்யப் போக உழைப்பு பின்தள்ளப்பட்டுவிட்டது. மனப்பாடம் மிக நல்ல பழக்கம். ''வைத்ததொரு கல்வி மனப்பழக்கம்'' என்றுதானே சொன்னார்கள்?''

## ஆல் த பெஸ்ட்

மாணவர்களானால், கடுமையாக உழையுங்கள். பதற்றப்படாமல் தெரிந்ததை எழுதுங்கள். மனசில் வேறுவிதமான சிந்தனைகளை முளைக்க விடாதீர்கள். தன்னம்பிக்கையோடு எழுதுங்கள். வெற்றி வெகுசுலபம்.

தேர்வுக்கு மேலும் உலகம் இருக்கிறது. தேர்வோடு எல்லாம் முடிந்து விடுகிறதில்லை என்கிற உணர்வைப் பிள்ளைகளிடம் ஊட்ட வேண்டிய கடமை, பெற்றோர்களே, உங்களுக்கும் இருக்கிறது!

பேட்டித் தொகுப்பு; கட்டுரை:
- நகர்வாலா


சீக்கிய தீவிரவாதிகள்
அகாலி தளம்


இலங்கை ராணுவம்


அமெரிக்காவிலிருந்து வருமுன்




வந்த பின்..
மியாவ்
மியாவ்





கல்கி

1985 பிப்ரவரி 24
மலர் : 43 இதழ் : 30
ரக்தாக்ஷி மாசி 13



## புதிய அமைச்சரவை – பழைய அமைச்சர்கள்

தேர்தல்கள் முடிந்து இரண்டு மாதங்களுக்குப் பிறகு ஒருவழியாகத் தமிழகத்தில் அமைச்சரவை அமைந்துவிட்டது. முதல்வர் திரும்ப வந்து அமைச்சர் அவையை உருவாக்க எடுத்துக் கொண்ட கால தாமதத்தை நோக்க ,ஏதேதோ மகத்தான மாறுதல்கள் நிகழப் போகின்றன என்று எதிர்பார்த்து ஏமாந்தோம். 'ப்பூ, இவ்வளவுதானா?'. என்று கேட்குமளவில் அதே பழைய முகங்கள்தாம்.

அமைச்சரவையில் புது ரத்தம் பாய்ந்தால், புதிய சிந்தனைகள் தோன்றும், புத்துணர்ச்சியும் சுறுசுறுப்பும் இணைந்து செயல்படும் என்றும் பழைய பழகிய அமைச்சர்கள் எனில் அனுபவம் துணை நிற்கும், தட்டுத்தடுமாற இடமின்றிக் காரியங்கள் இலகுவாகவும் துரிதமாகவும் நடக்கும் என்றும் இருவிதமாகவும் வாதாட முடியும். எனவே பழைய முகங்களே அடங்கிய இந்தப் புதிய அமைச்சரவையிடத்திலும் மக்கள் நிறையவே எதிர்பார்ப்பார்கள்.

பெரிய பெரிய எதிர்பார்ப்புக்கள் இருக்கட்டும், சில சில்லறை விஷயங்களில் கூடத் தமிழக அரசு அண்மையில் சரியாக நடந்து கொள்ளாதது எரிச்சலூட்டுவதாக இருக்கிறது. முதல்வருக்கு முதலில் பதவிப் பிரமாணம், மேலும் இரு அமைச்சர்களுக்கு இரண்டாவதாகப் பதவிப் பிரமாணம், மற்றவர்களுக்கு மூன்றாவதாக மற்றொரு நாள் பதவிப் பிரமாணம் என்று நிகழ்த்த வேண்டிய அவசியம் என்ன? முதல்வரின் பதவிப் பிரமாணத்தின் போது பத்திரிகையாளர்கள் அனுமதிக்கப்படாதது ஏன்? டீ. வி. நிலையத்தினர் காமிராவைப் பயன்படுத்தலாம்; ஆனால் ஒலி அமைப்பை உபயோகிக்கக் கூடாது என்று தடை விதித்திருக்க வேண்டுமா? டாக்டர் ஸ்ரீபாத ராவின் டீ. வி. பேட்டியைப் பிரதமக் காரியதரிசி சென்ஸார் செய்தது முறையா? என்ற கேள்விகளுக்குத் திருப்தி அளிக்கும் நியாயமான பதில்கள் கிடைக்கவில்லை. இந்தச் செயல்கள் தமிழக அரசுக்குப் பெருமை சேர்க்கவில்லை. அரசு உண்மைகளை மறைக்க முயலுகிறது என்ற கெட்ட பெயர் வந்து சேர்வது மட்டுமின்றிப் பலவிதமான வதந்திகள் பரவவும் இதுபோன்ற காரியங்கள் வழிவகுக்கின்றன.

முதல்வருக்குச் சில வார்த்தைகள்: ஏகப்பட்ட பொறுப்புக்களை உங்கள் மீது நீங்களே சுமத்திக் கொண்டிருக்கிறீர்கள். இது உங்களுக்கும் நல்லதல்ல; தமிழகத்துக்கும் நல்லதல்ல. விரைவிலேயே நம்பகமான புதிய சிலரை அமைச்சரவையில் சேர்த்துக் கொண்டு பொறுப்புக்களைப் பகிர்ந்தளித்து உங்கள் சுமையைக் குறைத்துக் கொள்ளுங்கள். அவரவரும் பொறுப்புக்களைச் சரியாக நிறைவேற்றுகிறார்களா என்று நீங்கள் மேற்பார்வையிட்டுக் கண்காணித்து வந்தாலே போதும். இதற்கு உதவும்படியாக அடிக்கடி அமைச்சரவைக் கூட்டங்கள் நடத்தி விவாதித்துத் தட்டிக் கேட்கவும் வழிகாட்டவும் செய்யலாம்.

இப்போது அடங்கி ஒடுங்கி இருக்கும் அ. தி. மு. க. குட்டித் தலைவர்கள் நீங்கள் அமெரிக்காவிலிருந்த போது இங்கே அட்டகாசம் பண்ணினார்கள். இதிலிருந்தே அ. தி. மு. க. வில் உட்கட்சி ஜனநாயகம் சரியாக இல்லை என்பது தெளிவாகிறது. அதை வளர்ப்பதுடன் அமைச்சரவையிலும் சீனியாரிடிகளை நிர்ணயிப்பது அரசும் சரி, கட்சியும் சரி தடங்கலின்றி இயங்க வழிவகுக்கும்.

தமிழகத்தில் நிறுவப்பட வேண்டிய பல சிறிய, பெரிய தொழிலகங்கள் ஆட்சியிலுள்ளோரின் அசிரத்தையாலோ ஆணவப் போக்காலோ தகுதியற்ற ஆசைகளாலோ வெளிமாநிலங்களுக்குப் போய்க் கொண்டிருக்கின்றன என்பதைக் காண மிகுந்த மனவருத்தம் உண்டாகிறது. இனியேனும் வாய்ப்புக்களை நழுவ விடாமல் தமிழகம் தொழில் துறையில் சிறந்தோங்கட்டும்.

தமிழ்த்திரு நாட்டைத் தன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா –பாரதியார்



○ சலங்கை ஒலி — சமீபத்தில் அதிகமாகக் கஷ்டப்பட்டுச் செய்த பாத்திரம்.

# கமல் பதில்கள்

59. பீளமேட்டைச் சேர்ந்த ஆர். ஜகநாதன் அவர்கள் போன வாரம் கேட்ட கேள்வி: இந்தி நடிகைகளுக்கும் தமிழ் நடிகைகளுக்கும் உள்ள நல்ல வேறுபாடுகள் உங்கள் அனுபவப்படி என்னென்ன?

ரொம்ப நன்றி. கெட்ட வேறுபாடு எதுவும் கேட்கவில்லை! நல்ல வேறுபாடுகள் என்று சொல்லியிருக்கிறீர்கள். நல்ல வேறுபாடுகள் என்ன என்றால், அவர்கள் இந்தியில் பேசுகிறார்கள். இவர்கள் தமிழில் பேசுகிறார்கள். அவர்கள் சல்வார் கம்மீஸ் உடுத்திக் கொள்கிறார்கள். இவர்கள் காஞ்சிபுரம் பட்டுப்புடவை உடுத்திக் கொள்கிறார்கள். அவர்கள் கறுப்பு நிற லிப்ஸ்டிக் போட்டுக் கொள்கிறார்கள். இவர்களும் சில சமயம் கறுப்பு நிற லிப்ஸ்டிக் போட்டுக் கொள்கிறார்கள். ஆனால் இவர்கள் சிவப்பு நிற லிப்ஸ்டிக்கே பல சமயம் உபயோகிக்கிறார்கள். அவர்கள் உபயோகிக்கும் ஹைஹீல்ஸின் உயரம் சற்றுக் கம்மியாயிருக்கிறது. ஏனென்றால் இயற்கையிலேயே அவர்கள் உயரம் அதிகமாக உள்ளவர்கள். இங்கே உயரம் அதிகமாக உள்ள நடிகைகள் ஒரு சிலரே இருப்பதனால், அவர்களைவிட உயரமான ஹைஹீல்ஸ்களை இவர்கள் உபயோகிக்கிறார்கள். இதைவிடக் கருத்துள்ள கேள்வி இருக்குமாயின், இதைவிடக் கருத்துள்ள பதிலைச் சொல்ல நான் தயாராயிருக்கிறேன். அடுத்த கேள்வி?

60. ஆர். ரேணுகா தேவி, பீளமேடு, கோவை.
கதைகள் எழுதுவதை ஏன் நிறுத்திவிட்டீர்கள்?

நீங்கள் படிப்பதை நிறுத்தி விட்டேன் என்று சொல்வதற்கு முன்னால், நான் இப்படிச் செய்வது கௌரவமாக இருக்கும் என்று கருதி நிறுத்திவிட்டேன்!

61. கே. பி. ராஜேஷ், சென்னை—17.
உங்களைப் பாரதியாராகப் பார்க்க வேண்டும் என்ற உள் ஆசை எப்போது நிறைவேறும்?

என்னுடைய ஆசையும் அதுதான். என்னைப் பாரதியாக வைத்துப் படம் எடுப்பேன் என்று ஆசை காட்டிய திரு. பாலசந்தர் அவர்களின் ஆசை நிறைவேறுமாயின், உங்களுடைய ஆசையும், என்னுடைய ஆசையும் நிறைவேறும்!

62. பா. கணேசன், பொம்மிடி.
தமிழ்த் திரைப்படம் குடியரசுத் தலைவரின் தங்கப் பதக்கம் பெறுவதற்கு என்ன தரங்களை, தகுதிகளைப் பெற வேண்டும் என்று கருதுகிறீர்கள்?

தரமான ரசிகர்களைப் பெறும் தரம் தமிழ்ப் படங்களுக்கு வரவேண்டும். பிறகு அது ஜனாதிபதிப் பரிசு என்ன, ஆஸ்கார் பரிசுகளைக் கூடப் பெறும் தரத்துக்கு உயர்ந்துவிடும்.

63 காளிதாஸ், கல்கத்தா.
நீங்கள் இவ்வளவு காலமாகப் படவுலகில் இருந்தும், இன்னும் கற்றுக் கொள்ளாதது?

உலகளவு.

64. ஸ்ரீ. சுப்பிரமணியன், மதுரை.
தாங்கள் அரசியலில் ஈடுபடும் உத்தேசம் உண்டா?

இல்லை என்று சொன்னால் அது பொய். ஆமாம் என்று சொன்னால் அதுவும்பாதிப் பொய். கறுப்புப் புள்ளிக் குத்திக்கொண்டு ஓட்டுச் சாவடிக்குள் நுழையும் எல்லோருமே

அரசியலில்அந்தக் காலகட்டத்தில் ஈடுபடு கிருர்கள். அந்த அளவு ஈடுபாடு எனக்கும் உண்டு; அவ்வளவே.

**65. ஸ்ரீ. ஆறுமுகம், நிட்டக்குடி.**
**தாங்கள் நடித்த கதாபாத்திரங்களில், தங்களுக்குச் சிரமத்தைத் தந்த பாத்திரம் எது? அதனுல் தங்களுக்கு என்ன பயன் கிடைத்தது?**

ஒவ்வொரு முறையும் சிரமமாக இருப்பது போல் தோன்றும். அதைவிட சிரமமும் பரிட்சைகளும் அடுத்த படத்தில் வரும். எல்லேப் பொறுத்த வரையில், சமீப காலத்தில் அதிகமாக நான் வியர்வை சிந்திய படம், பலமுறைவும் யோசித்து யோசித்துச் செய்த பிறகும் சில கடுமையான விமர்சனங்களும், பெருமைக்குரிய பாராட்டுக்களும் பெற்ற படம் 'சலங்கை ஒலி.' தெலுங்கில் 'சாகர சங்கமம்'. அதில் …ம் கட்டாயம் பிராக்டிஸ் இல்லாமல்,


○ பாரதியாய் பார்க்கும் ஆசை.

மறந்துவிட்ட பரதநாட்டியக் கலையை, தாடி ஒட்டி, தூலாம்படையை அகற்றி, செய்து காட்டவேண்டிய நிர்ப்பந்தத்துக்கு ஆளாக்கப் பட்டேன். அப்போது எனக்குப் பெரிய பெரிய கலை வல்லுநர்கள் நடனம் கற்றுத் தந்து, இப்படி இப்படி இருக்க வேண்டும் என்ருர்கள். கதக் நடன வல்லுநர் திரு. கோபிகிருஷ்ணு மட்டுமின்றி இங்கேயும் உள்ள சில நல்ல பரதநாட்டிய, குச்சுப்புடி, கதகளி கலைஞர்கள் அந்தத் திரைப்படம் உருவாகும்போது எனக்குப் பயிற்சி தந்தார்கள். அதற்குப் பிறகு சில கடுமையான விமர்சனங்கள் – நான் பரதநாட்டியப் பாரம்பரிய வரம்பை மீறிவிட்டதாக வந்தன. அதேசமயத்தில், தரமான படத்தை விரசமில்லாமல், வியாபார யுக்திகளுக்காகச் சில காபரே நடனங்களைப் புகுத்தாமல் தயாரித்துவிட்ட பெருமை எங்களுக்கு வந்து குவிந்தது. இதுதான் சமீபத்தில், அதிகமாகக் கஷ்டப்பட்டுச் செய்த பாத்திரம். வயதான வேடம் ஏற்று நடித்த அதில், தாடி ஒட்டிக்கொண்டு முகச்சுருக்கம் எல்லாம் ஏற்படுத்திக் கொண்டு, நடிக்கவேண்டி நேர்ந்தது. ஷூட்டிங் முடிந்து ஒரு மணி நேரத்துக்கு வேறு வேலே ஏதும் செய்ய முடியாத அளவு ஈடுபாட்டை என்னிடம் ஏற்படுத்திய படம் 'சலங்கை ஒலி.'

**66. உமார்த்தி, கோவை.**
**கல்கி அவர்களின் 'பொன்னியின் செல்வன்' கதையைத் திரைப்படமாக்கினுல் எந்தப் பாத்திரத்தில் நடிக்க விருப்பம்? ஏன்?**

கண்டிப்பாக வந்தியத்தேவன் என்றுதான் சொல்லுவேன் என்று நீங்கள் எதிர்பார்ப்பீர்கள். அதையேதான் நானும் சொல்லுவேன். இந்த நாவலேப் பற்றிப் பலர் சொல்லிக் கேட்டிருக்கிறேன். என்னுடைய போதாத காலம், அதைப் படிக்க முடியாத நிலேயில் நான் இருந்திருக்கிறேன். சோம்பேறித்தனம் என்றுதான் சொல்ல வேண்டும். இவ்வளவு நல்ல நாவலேப் படிக்க முடியாததற்கு வேறு என்ன காரணம் இருக்க முடியும்? பப்ளிக்காக இத்தனேபேருக்கு முன்னுல், 'நான் 'பொன்னியின் செல்வன்' படிக்கவில்லே' என்று சொல்லும் ஒரு அவமானத்துக்கு ஆளாகிவிட்டேன் என்பதனுல், அதைக் கட்டாயம் படிப்பேன் நான்!

**67. எஸ். விஜயகுமார், ஒரத்தநாடு.**
**இந்தி நடிகர்கள் தேவ் ஆனந்த், பிரோஸ்கான் போன்று, ஒரு படத்தை எழுதி, இயக்கும் எண்ணம் உண்டா?**

ஹிந்தி நடிகர் தேவ் ஆனந்த் போன்ரே, அல்லது பிரோஸ்கான் போன்ரே செய்ய வேண்டும் என்ற எண்ணம் இல்லே. ஆனுல் திரு ராஜ்கபூர் போன்று, திரு. கே. ஆஸிஃப் போன்று, திரு. குருதத் போன்று, திரு பாலசந்தர் போன்று செய்யவேண்டும் என்ற ஆசை இருக்கிறது. ஆசை இருக்கு தாசில் பண்ண...

**68. மு. தேன்மொழி, திருச்சி–17.**
**உங்களுடைய நடிப்பு, சாதனேயும் திறமையும் கொண்டது என நீங்கள் நினேக்கிறீர்களா?**

இந்த விஷயத்தில் நீங்கள் நினேப்பதுதான் முக்கியம். நான் என்ன நினேக்கிறேன் என்பது முக்கியமில்லே.

**69. பி. ஆர். ஸ்ரீதர், வில்லிவாக்கம்.**
**நீங்கள் பாலசந்தர் படத்தில் நடிக்கிறீர்கள். மற்றவர்கள் டைரக்ட் செய்யும் படத்தில் நடிக்கிறீர்கள். அப்போது ஏதாவது வித்தியாசத்தை உணருகிறீர்களா?**

பிறந்த வீட்டுக்கும், புகுந்த வீட்டுக்கும் இருக்கும் வித்தியாசங்களே.

**70. மெ. முத்து, ஆவடி.**
**பாலசந்தர், பாரதிராஜா, பாலு மகேந்திரா, பாக்கியராஜ் ஆகியோரிடம் அவர்கள் துறையில் நீங்கள் காணும் ஒற்றுமை வேற்றுமைகள் என்ன?**

அடுத்த வாரம் சொல்லுகிறேன்!

– தொகுப்பு: **சித்தார்த்.**



வைரங்கள்

## ஏழு நாடுகளில் எட்டு வாரங்கள்



### 18

நிலமுறை குலமுறையாக வைரத் தொழிலில் ஈடுபட்டிருப்பவர்கள் — என்று குறிப்பிட்டு விளம்பரப்படுத்திக் கொள்வது ஆம்ஸ்டர்டாம் வைர வியாபாரிகளிடையே ஒரு மரபாயிருந்து வருகிறது. எங்கள் கோச்சில் பலர் மனைவியோடும், குடும்பத்தோடும் வந்திருந்தார்கள். சிலர் தங்கள் காதலியோடு வந்திருக்கவும் கூடும். என்னைப்போல் ஏகாங்கிகள் குறைவுதான். எங்கள் கோச்சின் வழிகாட்டி, கிரிக்கெட் காமெண்ட்ரியில் மைதானத்திலே விளையாட்டுச் சூடுபிடித்துப் பிரமாதமாயிருக்கும் போது குரலில் ஒரு விறுவிறுப்பு ஏறுமே அப்படிப்பட்ட விறுவிறுப்புடன் ஆரம்பித்தார். பெண்களின் காதில் அது தெளிவாகக் கேட்டிருக்க வேண்டும்.

''நௌ தி பிரைட்டஸ்ட் அண்ட் கிளிட்டரிங் பார்ட் ஆஃப் அவர் டூர் பிகின்ஸ்... ஃபைனலி வி ஆர் கோயிங் டு விஸிட் எ டயமண்ட் ஃபேக்டரி'' என்று சொல்லும்போதே குரல் உச்சஸ்தாயிக்குப் போயிருந்தது. முன்னைவிடக் கணீரென்றும் ஒலித்தது. ஜொலித்தது. இருபுறமும் படகுகள் நிறுத்தப்பட்டிருந்த ஒரு கால்வாயின் கரையில் போய் கோச் நின்றது. ஆம்ஸ்டர்டாமிலும், சுற்றுப்புறங்களிலும் — அதாவது டச்சு நிலப்பகுதி முழுவதும் — பல மாடிக் கட்டிடங்களைக் காண முடியவில்லை. பைல் பவுண்டேஷனுக்கு வாய்க்கில்லாத தளர்ந்த ஈர மண்தரையாக இருப்பதால் உப்பங்கழிகளுக்கு இடையே உள்ள பெரும்பாலான கேரள ஓட்டு வீடுகளைப் போலவே டச்சு இல்லங்கள் — கட்டிடங்கள் — இருந்தன. வளைகுடா நாடுகளில் பொருளீட்டத் தொடங்கியபின் ஈர நிலப்பகுதி அல்லாத சில கேரள மாவட்டங்களில் இப்போது பலமாடிக் கட்டிடங்கள், ஆர். ஸி. முறை, பைல் அஸ்திவாரம் எல்லாம் வந்துவிட்டன. ஆனால் ஹாலந்து இன்னும் மாறாமல் பழையபடியே இருக்கிறது. குரூட் ஆயில், பெட்ரோலியம் பண்டங்களுக்கான 'ஸ்பாட் மார்க்கெட்' ஆம்ஸ்டர்டாமை மையமாகக் கொண்டிருந்தும் பணப்புழக்கத்தால் வருகிற 'ஸ்கைஸ்கிராப்பர் நாகரிகம்' இங்கு இன்னும் பரவவில்லை. நாங்கள் பார்த்த வைரப்பட்டறை ஒரு சாதாரண ஆம்ஸ்டர்டாம் வீடு போலவே இருந்தது. அதற்கான காரணத்தை விளக்கும்போது எங்கள் கோச்சின் வழிகாட்டி டச்சு நிலப்பகுதியில் ஏன் பல அடுக்கு மாடிக் கட்டிடங்களும், பைல் பவுண்டேஷனும் இல்லை என்பதற்கான விளக்கங்களைக் கூறினார். பேஸ்மண்ட், முதல் மாடி, இரண்டாம் மாடி என்ற பாணியில் அந்த வைரப்பட்டறையோடு இணைந்த வீடு அமைந்திருந்தது. குடியிருப்புப் பகுதியும் உள்ளேயே சேர்ந்திருந்தது. பேஸ்மண்டில் ஒரு சிறிய ரெஸ்டாரெண்ட், முதல் மாடியில் பட்டறை. அடுத்த மாடியில் ஷோ ரூம்

## வைரப் பட்டறை



வைரம் பட்டை தீட்டப்படுவதைப் பயணிகள் பார்க்கின்றனர்.

என்று அந்தக் கட்டிட அமைப்பு இருந்தது. பிரதான சாலையில் வாகனத்தை நிறுத்தி விட்டுக் கால்வாய்க் கரை ஓரமாகச் சிறிது நடந்து போய்க் கட்டிடத்திற்குள் நுழைய வேண்டியிருந்தது. தினசரி சுற்றுலாப் பயணிகள் இந்த நேரத்திற்குத் தான் வருவார்கள் என அவர்கள் எதிர்பார்த்தே காத்திருப்பது போலிருந்தது. ஆம்ஸ்டர்டாம் நகரில் உல்லாசப் பயணிகளுக்கு ஊர் சுற்றிக்காண்பிக்கும் ஒவ்வொரு டூரிஸ்ட் கோச்காரர்களும் இப்படி ஏதாவதொரு வைரப்பட்டறைக்குப் பயணிகளை அழைத்துச் செல்வதுண்டென்றும் இதில் வியாபார நோக்கமும் உண்டென்றும் எங்கள் கோச்சின் வழிகாட்டியை விசாரித்ததில் விவரம் தெரிந்தது. உள்ளே நுழைந்ததுமே ஓர் அழகிய இளம் யூத யுவதி நினைவில் வந்து பதியும் கவர்ச்சியான ப்ளூஜாக்கர்ப் புன்முறுவலோடு எல்லோரையும் வரவேற்றாள். பின்பு ரெஸ்டாரெண்ட் பக்கம் கையைக் காபிண்பித்து. ''இப்போது நீங்கள் மிகவும் களைத்திருப்பீர்கள்! நிறைய இடங்களைச் சுற்றிப் பார்த்த அலுப்பு வேறு இருக்கும். முதலில் இந்த ரெஸ்டாரெண்டில் உங்களுக்கு விருப்பமானதை எல்லாம் சாப்பிடுங்கள். சற்றே ரிலாக்ஸ் செய்து கொள்ளுங்கள். அப்புறம் மற்றவற்றைப் பார்க்கலாம். இங்கே சாப்பிடும் எதற்கும் தயவு செய்து நீங்கள் பணம் தரக் கூடாது. இவற்றை எங்கள் வைரப்பட்டறையின் அன்பு உபசரணையாக ஏற்க வேண்டும்'' — என்று மிகவும் இதமான குரலில் வேண்டினாள். எனக்கு ஒரே வியப்பு. எத்தனை இங்கிதமான உபசாரம்!

இஸ்ரேலிலும், ஐரோப்பாவிலும் அமெரிக்காவிலும் யூதர்கள் எப்படி வெற்றிகரமான தொழிலதிபர்களாகவும், வர்த்தகர்களாகவும் பாங்கர்களாகவும் விளங்குகிறார்கள் என்ற

○ வைரப்பட்டறை முகப்பில் உள்ள கால்வாய் அருகே ஆசிரியர்.



இரகசியம் எனக்கு விளங்கத் தொடங்கியது. தங்கள் நிறுவனத்தின் வாயிற்படியில் கால் வைத்தவுடனேயே வாடிக்கையாளர்களை, வசப்படுத்தும் கலையில் அவர்கள் தேர்ந்திருந்தனர் என்பது புரிந்தது.

இந்த உபசரணை முடிந்ததும் அந்த யுவதி எங்களை முதல் மாடிக்கு அழைத்துச் சென்றாள். எங்கள் டூர் வழிகாட்டி சும்மா கூட வந்தார். வைரத் தொழிற்சாலையில் வழிகாட்டும் பொறுப்பை அந்த மில்லியன் டாலர் ப்ளூ ஜாக்கர் புன்னகை யுவதி மேற்கொண்டாள். விளக்கங்களையும் அவளே கூறினாள். வைரத் தொழில் பற்றி நிறையத் தெரிந்து வைத்திருந்தாள். வந்திருக்கும் உல்லாசப் பயணிகளில் ஜெர்மன், பிரெஞ்சு, இங்கிலீஷ், ஆகிய மூன்று மொழிகளில் எந்த மொழி பேசுவோர் — புரிந்து கொள்வோர் அதிகமாயிருக்கிறார்கள் என்பதை முதலிலேயே விசாரித்துத் தெரிந்துகொண்டு அதன் பின்பே தன் விளக்கவுரையைத் தொடங்கினாள். அதிர்ஷ்டவசமாக அன்று எங்கள் கோச்சிலிருந்து இறங்கிச் சென்ற பயணிகளில் பலர் ஆங்கிலம் மட்டும் தெரிந்தவர்களாக இருக்க நேர்ந்ததனால் அவளது விளக்கவுரை ஆங்கிலத்திலேயே அமைந்தது. டூரிஸ்ட் கோச்சுகளில் கூடக் கோச்சுடன் வரும் கய்டு — இந்த முறையையே கடைப்பிடிப்பது வழக்கமாயிருக்கிறது. பள்ளி ஆசிரியை கரும்பலகையில் உள்ளவற்றைச் சுட்டிக் காட்டுவதற்காக வைத்திருக்கும் சிறிய பிரம்பைப்போல் ஒரு பிளாஸ்டிக் குச்சி வைத்திருந்தாள் அவள். வாத்தியாரம்மாவைப் பின் தொடர்கிற மாணவர்களைப் போல் பின்தொடர்ந்தோம்.

''பல தலைமுறைகளாக வைரத் தொழிலில் ஈடுபட்டுள்ள ஒரு குடும்பத்துக்குச் சொந்தமான பட்டறையில் இப்போது நீங்கள் இருக்கிறீர்கள்'' என்றாள்.

'ஒரு வைரக்கல்லை வாங்குமுன் எந்தெந்த அம்சத்தைக் கவனிக்க வேண்டும்?' என்று ஓர் அமெரிக்க யுவதி குறுக்கிட்டுக் கேள்வி கேட்டாள்.

உடனே அந்தக் கேள்வியைப் பாராட்டி நன்றி சொல்லிவிட்டு வழக்கமான ப்ளூ ஜாக்கர்ப் புன்னகையோடு பதில் சொல்லத் தொடங்கினாள் எங்கள் வழிகாட்டி:

''காரட், வெயிட், கலர் கிளாரிட்டி, கட் ஆகிய அம்சங்களைக் கவனித்து ஒரு வைரக் கல்லைப் பற்றிய தரத்தை முடிவு செய்யலாம்—''

வைரம் பட்டை தீட்டப்படுகிற முதல் மாடிக்குள் நுழைந்தோம். ஒரே நீள ஹால் மாதிரி இருந்த அந்தப் பகுதி தூசி தும்பு இல்லாமல் அழுக்கு அடைசல்கள் இல்லாமல் படுசுத்தமாக இருந்தது. பாங்கு முகப்பு மாதிரி நீளமான ஒரே மேஜை. அதில் ஒவ்வொரு பட்டை தீட்டுபவருக்கும் வசதியாய்த் தனியான, தனிவான மேஜை விளக்குகள். விளக்கடியில் மின்சாரத்தால் உரிய வேகத்துக்குச் சுழலும் உறைகள். வாடிக்கை

நா. பார்த்தசாரதி

யாளர் கூடத்தில் நின்று பார்க்கத் தோதாகக் கண்ணாடியால் தடுக்கப்பட்டிருந்தது. சிலர் சாதாரண மூக்குக் கண்ணாடியும், வேறு சிலர் கடிகார ரிப்பேர் செய்கிறவர்கள் அணிகிற மாதிரி பெரிதுபடுத்திக் காட்டும் லென்ஸும் அணிந்து பட்டை தீட்டிக் கொண்டிருந்தார்கள். பட்டை தீட்டுகிற கல்லிலோ, நீளத்தொடர் மேஜையிலோ கொத்துமல்லி விதையை விடச் சிறிய வைரம் எங்கு விழுந்தாலும் உடனே கண்டு பிடித்து எடுத்து விடுகிற மாதிரி விளக்கொளி ஜெகஜ்ஜோதியாயிருந்தது.

பட்டறையைப் பார்த்து முடித்தவுடன் அடுத்த மாடியில் உள்ள ஷோரூமில் கொண்டு போய் விட்டு அங்கிருந்த மற்றொரு யூதப் பெண்மணியிடம் எங்களை ஒப்படைத்தான் வழிகாட்டி. அது ஒரு பக்கச் சுவர் தவிர மற்ற எல்லாப் பக்கங்களிலும் கண்ணாடியால் (புல்லட் புரூஃப்) தடுக்கப்பட்ட கூடம்.

பளிரென்றிருந்த கண்ணாடி பதித்த மேஜையில் வெள்ளமாக விளக்கொளி. அதில் வெல்வெட் துணி பதித்த ட்ரே. எல்லோரும் உள்ளே நுழைந்துவிட்டோமா என்று விசாரித்துத் தெரிந்து கொண்டு உட்கார்ந்திருந்த இடத்திலிருந்தே மேஜை மேலிருந்த ஒரு பட்டனைத் தட்டினாள். எல்லாக் கண்ணாடிக் கதவுகளும் தாமாக மூடிக் கொண்டன.

''மறுபடி நானே திறக்கிறவரை யாரும் கதவுகளையோ, கண்ணாடிப் பகுதிகளையோ தொடவேண்டாம். தொட்டால் 'பர்க்லர் அலாரம்' ஒலிக்கத் தொடங்கிவிடும்'' — என்று எச்சரித்தாள்.

அவள் மேஜை மேலிருந்த இண்டர்காமை எடுத்து யாரிடமோ 'ரெடி' என்றாள். அடுத்த கணமே மேஜைமேல் சிவப்பு விளக்கு ஒருகணம் எரிந்து அணைந்து பச்சை விளக்கு எரியத் தொடங்கி நீடித்தது. லிஃப்ட் இயங்குகிற மாதிரி ஒருவகை ஓசையை யடுத்து அவளது வலது கைப்பக்கமாக இருந்த டிரேயில் வெல்வெட் துணி முடிச்சு ஒன்று ஃபைபர் குழாய் வழியே வந்து விழுந்தது.

''உங்களுக்குக் காண்பிக்கப்பட வேண்டிய வைரங்கள் இதோ வந்து விட்டன''— என்று சொல்லிக் கொண்டே அந்த முடிச்சை எடுத்துப் பிரித்து மேஜைமேல் வைரங்கள்— சில வைர மோதிரங்கள் உட்பட — எல்லாவற்றையும் பரப்பினாள். ''40 டாலர் முதல் நாலாயிரம் டாலர் வரை பெறுமானமுள்ள வைரங்களை உங்கள் முன் வைக்கிறேன். உங்கள் மனைவிக்கோ காதலிக்கோ வைர மோதிரங்கள் வாங்க இது சரியான இடம். மனைவியோடு காதலியும் உள்ளவர்கள் ஒன்றிற்கு இரண்டு மோதிரங்களாகக் கூட வாங்கிக் கொள்ளலாம்! எங்களுக்கும் இரட்டை மகிழ்ச்சி. நீங்கள் உங்களது கலியாண மோதிரத்தை வாங்கும்போது உங்களுக்கு இப்படி ஒரு வைர மோதிரம் கிடைக்காமலும் போயிருக்கக் கூடும். அந்தக் குறையைச் சரி செய்ய அடிஷனலாக இப்படி ஒரு வைர மோதிரத்தை வாங்குங்கள்''— என்பதுபோல் கலகலப்பாகவும், நகைச்சுவையாகவும், முந்திய வழிகாட்டிப் பெண்மணியை விட அதிகக் காரட் உள்ள ப்ளு ஜாக்கர்ப் புன்னகையோடும் உரையாடினாள் விற்பனைத் திறன் மிக்கவளாகத் தோன்றிய இந்தப் பெண்மணி. பல அமெரிக்கப் பயணிகள் மோதிரங்கள் — வைரங்களை வாங்கினார்கள். சிலர் தங்கள் மனைவியைச் சுட்டிக்காட்டி, ''இவளே ஒரு பெரிய இரத்தினம். இவளுக்கு இன்னொரு வைரம் அவசியமில்லை'' — என்று ஜோக் அடித்தார்கள். ஓர் அமெரிக்க இளைஞன், ''என் காதலியோடு அடுத்த முறை இங்கு வருவேன்''— என்றான். 'மோஸ்ட் வெல்கம்' என்றாள் அந்தப் பெண். முக்கால் மணி நேரத்துக்குப் பிறகு மறுபடி சிவப்பு, பச்சை விளக்குகளுடன் வெல்வெட் முடிச்சு பத்திரமாக ஃபைபர் குழாய் வழியே திரும்பிப் போன பின் கண்ணாடிக் கதவுகள் திறக்கப்பட்டன. வைரப்பட்டறைக்குக் 'குட்பை' சொல்லி விட்டுப் புறப்பட்டோம். கீழே இறங்கியதும் மறுபடி ரெஸ்டாரெண்ட் வாசலில், ''இஃப் யூ லைக் யூ கேன் ஹேவ் ஏ கப் ஆஃப் காபி''— என்று விருந்துபசாரம் நடந்தது. ஒவ்வோர் ஊரிலிருந்தும் சென்னையில் வீட்டுக்கு ஒரு விமானத் தபால் போடுகிற வழக்கமுடைய நான் ஆம்ஸ்டர்டாமிலிருந்து எழுதிய தபாலில் வைரப்பட்டறையைப் பார்த்தது பற்றி மூச்சு விடவில்லை. திரும்பிய பின்பும் கூட இந்தக் கட்டுரையை எழுதும் வரை அது பற்றி மறந்தும் நான் என் மனைவியிடம் பேசவில்லை. அவ்வளவு முன் ஜாக்கிரதை! மாலை ஆறு மணிக்கு ஓட்டல் 'ஆந்தை'யில் 'பில்' செட்டில் பண்ணிய பின் விமான நிலையத்திற்கான கே.எல்.எம். கோச் புறப்படும் செண்டருக்குப் போக 'ட்ராம்' பயண அளவுக்கே மீதிப் பணமிருந்தது. டிராமில் கிளம்பி செண்டல் வந்து கோச்சில் ஏறி வண்டனுக்காக விமான நிலையம் சென்றேன். விமான நிலையத்தில் ஓர் ஆபத்து என்னை எதிர்கொள்ளப் போவது அப்போது எனக்குத் தெரியாது! (தொடரும்)

---

''ஆச்சர்யமாயிருக்கே! எல்லோரும் ஏகப்பட்ட வாக்குறுதிகளை வாரிவிட, நீங்க ஒரே ஒரு வாக்குறுதியைக் கொடுத்து ஜெயிச்சுட்டீங்களா!''

''ஆமாம். இந்தத் தேர்தலில் வெற்றியடைந்தால் இனித் தேர்தலிலே போட்டியிடமாட்டேன்னு சொன்னேன்.''

—ஜோ. அ. சந்திரவேல்.



நூல் பிடித்த மாதிரி வரிசையாய் நாலைந்து அம்பாஸடர்கள்.

நடுவில் நிறுத்த இடமில்லாமல் ஒரு ஓரத்தில் போய் நின்றது ஆட்டோ.

"இதானா?" என்று கேட்டுக்கொண்டே தலையை மட்டும் நீட்டினான் வரது.

"இதான் எறங்குங்க..." என்று சொல்லி விட்டு ஓரத்திலிருந்து மையத்திற்குத் தள்ளி வந்தாள் மைதிலி.

ஆட்டோவுக்குக் காசு கொடுத்துவிட்டு உள்ளே நுழைந்தார்கள். இவர்கள் தலைகளைப் பார்த்ததும் தேவகி எல்லோரையும் விலக்கிக் கொண்டு கிடுகிடுவென்று ஓடிவந்தான்.

"வரணும்... வரணும்... ரெண்டு நாள் முன்னாடி வர்ற லட்சணமா இது?" முதலில் சிரிப்பாகவும், அப்புறம் பொய்க் கோபமாகவும் வார்த்தைகள் திரண்டு களக் களக் என்று கொட்டின.

"இத பாருங்க... ஜானவாசத்துக்கு முன்னாடியாவது வந்து சேர்ந்துட்டீங்க... இருந்துட்டு ஊர்வலத்திலெல்லாம் வந்துட்டு நல்லாச் சாப்டுட்டு, ராத்திரிக்கு அயோத்யா லாட்ஜ்ல... ஒரு நிமிஷம்—ராகவா... இங்க வாயேன்... அந்த அயோத்யா லாட்ஜ் ரூம் நம்பர் எட்டோட சாவியைக் கொண்டாயேன்—உங்களுக்குன்னு ரூம் போட்டு வச்சிருக்கேன்... காலம்பற பத்தரை, பன்னண்டுக்கு முகூர்த்தம். ராத்திரி பூரா ரெஸ்ட் எடுத்துக்குங்கோ... ஆனா காலைல ஏழு மணிக்கு இங்க இருந்தாகணும்... நீங்கள்ளாம் இல்லாம எனக்குக் கையும் ஓட மாட்டேங்கறது.. காலும் ஓடமாட்டேங்கறது... நீங்கதான் கல்யாணத்தை முன்னே நின்னு நடத்திக் கொடுக்கணும் — வாங்கோ... வாங்கோ... கடைசியா கோயம்புத்தூர்லே வெச்சிப் பார்த்தது... இதான் ரெண்டுநாள் முன்னாடி வர்ற லட்சணமா — நீங்க போங்க... நான் அவங்களைக் கவனிச்சுட்டு வந்துடறேன்... உள்ளே போங்க..." தேவகி கிடுகிடுவென்று வரதுவையும், மைதிலியையும் விட்டுவிட்டு முன்னால் பாய்ந்தான்.

"அதே தேவகி... மைதிலி" என்று முணுமுணுக்கிற குரலில் சொன்னான் வரது. இதுவரை தேவகியின் நடை, உடை, பாவனை என்று எல்லாவற்றையும் ஆராய்ந்து கொண்டிருந்துவிட்டு, "அந்தப் படாடோபம் இன்னும் மாறல்லே... அடுத்தவங்களுக்காகச் சிரிக்கிறது, கூடவே பின்னால் அவர்களைப் பத்திச் சொல்றது எதுவுமே சரி... அச்சு அப்படியே பழைய தேவகிதான்..."

யாரோ திடுரென்று முன்னால் வந்து சிரித்தார்கள். பதிலுக்கு அவனும் புன்னகைத்தான்.

தேவகியின் பெண் ரமா இடுப்பில்

# மொட்டுக்குள் முள்ளை வைத்து...

— சுபா —



ஒட்டியாணமும், நெற்றியில் சுட்டியும், விரலில் நெளியும் தரித்துக் கொண்டு முகம் நிறைய ரோஸ் பவுடரும், உதடு நிறைய சிவப்பு லிப்ஸ்டிக்குமாய் ஒரு தவிப்போடு நடந்து வந்தாள். கூடவே தோள் பிடித்துக் குலுங்கிக் கொண்டே இரண்டு பெண்கள்.

மைதிலியைப் பார்த்ததும் அசுவையாய்ப் புன்னகைத்தாள். "இப்பத்தான் வந்த மாதிரி இருக்கு..." என்றாள்.

"கங்ராட்ஸ் ரமா..." என்றாள் மைதிலி.

"தாங்க்ஸ்..., இந்த அம்மாவைப் பாரேன்.. இல்லாத அலங்காரமெல்லாம் பண்ணிவிட்டிருக்கா... கார்ல போய் நாலு பேருக்கு முன்னாலே நடுத் தெருவுல மாப்பிள்ளை வேறப் பாக்கணுமாம்... என்னைத் தொணப்பி எடுத்தாச்சு..."

"ஒருநாள்தானே ரமா... அட்ஜெஸ்ட் பண்ணிக்கோ..." என்று முனகுகிற மாதிரி சொன்னாள் மைதிலி.

காதில் வாங்கினாளோ இல்லையோ நகர்ந்துவிட்டாள்.

"இது சின்னப் பொண்ணு... இதுக்கு லிப்ஸ்டிக்கும், இன்னொண்ணும் அலர்ஜியா இருக்கு... தேவகியைப் பாரேன்... முதுகு வரைக்கும் குட்டைப் பின்னல்... இடுக்கில எல்லாம் ரோஸ் பவுடர்... இடுப்புக்குக் கீழே புட்டவை... ஊர்ல இருக்கற அத்தனை பெரிய மனுஷங்களோடேயும் சிநேகம்... தேவகிக்கு அவளுக்கும் சரி... இவளுக்கும் சரி... பெரிய மனுஷியாக் காட்டிக்கணும்... பெரிசா நடத்துக்கணும்..."

கோவிலில் ஒரு அரைமணி நேரம். அப்புறம் வெளியில் வந்து மாப்பிள்ளை காரோடு ஒரு மணி நேரம். முன்னால் பாண்டு வாத்தியம் 'அண்ணே, அண்ணே' என்று காதைப் பிய்த்தது. பின்னால் நாதசுரம் 'மாப்பிள்ளை வரார்... மாப்பிள்ளை வரார்...' என்று கனசந்தோஷமாய் முழங்கிற்று.

ஆரத்தி அது இது என்று அத்தனையும் அமர்க்களப்பட்டு, வீடியோவில் இந்த வேஷங்கள் எல்லாம் பதிவான பின்னால் மறுபடியும் கூடம் கொஞ்ச கொஞ்சமாய் நிறைய தேவகி எங்கிருந்தோ சாரைப் பாம்பு மாதிரி வழிதேடிக் கொண்டு ஓடிவந்தாள்.

"முதல் பந்தியிலேயே உங்களுக்கு எடம் ரிசர்வ் பண்ணியாச்சி வரது... சாப்டுடுங்க..."

வரது மறுத்துக் கூற முடியாமல் சாப்பாடு ஹாலில் நுழைந்தான். சாயங்காலம் இங்கே வருவதற்குக் கொஞ்சம் முன்னால் தான் டிஃபனை ஒருகை பார்த்தது."வா மைதிலி... சாப்டா மாதிரி பேர் பண்ணுவோம்..." வரது காலியாய் இருந்த வரிசையின் மையத்தில் உட்கார்ந்து கொண்டான்.

"அந்தப் புடவையைப் பார்த்தீங்களா... நல்லால்ல... புதுசா வந்திருக்கு... டின் சேர்ன்னு பேரு..." என்று மைதிலி வேறு

## அடுத்தவாரம்

படத்துக்குள் ஒரு படமாக நாம் பார்க்கும் வீடு, வாசல் எல்லாம் பிரும்மாண்டமான ஒரு **Jigsaw Puzzle!** வாழ்க்கையும் அப்படிப்பட்ட ஒரு புதிர்தான். தெறிவிடாமல் ஒழுங்குபடுத்தி ஒன்றுசேர்த்தால் புதிர், அழகிய ஓவியமாக மாறுகிறது. வாழ்க்கையும் அவ்வாறே ரசனை மயமாகிச் ஜொலிக்கிறது....

ஏராளமான தொழில்களை மட்டுமின்றி வாழ்க்கையையும் திறம்பட நிர்வகித்துக் கொள்கிற திரு. டி. டி. வாசு அளிக்கும் ரசமான பேட்டி!



ஏதோ புடவையில் வைத்த கண்ணை எடுக்காமல் அவன் பின்னால் வந்தான்.

பின்னாலேயே ஒரு ஏழு வயசு. பாவாடையின் விளிம்புக் கிழிசலோடு. பிரிபிரியாய்த் தொங்கிய நூலோடு. கலைந்த முடியோடு. கொஞ்சம் தெற்றுப் பல்லோடு. இவர்களை நிமிர்ந்து பார்த்துவிட்டு ஒரு மௌன சம்மதத்தை அதுவாய் ஏற்றுக் கொண்டு வந்தது. மைதிலி நாற்காலியில் உட்கார்ந்ததும் அவள் பக்கத்து நாற்காலியில் டக்கென்று உட்கார்ந்து கொண்டது.

சளசளவென்று மறுபடி பேச்சுச் சத்தம் கொஞ்சம் கொஞ்சமாய் ஹாலை ஆக்கிரமித்தது.

மைதிலி பக்கத்தில் உட்கார்ந்த பெண்ணைப் பார்த்தாள். கண்களில் பசி தெரிந்தது. பசியைவிட பயம் இருந்தது. பயத்தைவிட ஏக்கம் இருந்தது.

மைதிலி உள்ளுக்குள் பரிதாபப்பட்டாள். டம்ளரில் இருந்த தண்ணீரை எடுத்துத் தனக்கும் அந்தக் குழந்தையின் இலைக்குமாய்த் தெளித்துவிட்டாள்.

''டேய் பருப்பு...'' என்று குரல் அதிதஸ்தாயியில் ஒலிக்கச் சரசரவென்று பின்னாலேயே சொத், சொத் என்று பருப்பு. அப்புறம் கோஸ் பொரியல். அப்புறம் தயிர்ப்பச்சடி. பின்னாலேயே மைசூர்ப்பாகு என்று அயிட்டம் அயிட்டமாய்ப் பாய்ந்து பாய்ந்து வந்தது. திடீரென்று ''ஏய்'' என்று ஒரு அதிகாரக் குரல். தேவகிதான். சாப்பாட்டு ஹால் மூலையிலிருந்தே கத்திக் கொண்டு வந்தாள்.

மைதிலிக்குப் பக்கத்து இலைக்கெதிரில் வந்து நின்றாள். ''எழுந்திருடி... ச்சீ, எழுந்திரு... மொதப் பந்தியிலே தண்டச் சோத்துக்கு வந்தாச்சா...'' என்று மிரட்டுகிற பாவனையில் குரல். ஆட்காட்டி விரல் வேறு சுட்டிக்காட்டி ஒரு சின்ன நடுக்கத்துடன் மேலும் கீழுமாய் ஆடிற்று.

அடுத்த வார்த்தைக்குக் குழந்தை அழுதுவிடும் போல இருந்தது. உட்கார்ந்த இடத்தைப் பிரிய மனமில்லாமல், பாதி எழுந்தும், எழாமலும் இருந்த ஒரு பாவனையில் மைதிலி சட்டென்று அதன் தோளை அழுக்கி உட்கார வைத்தாள்.

''சாந்தாவையா எழுந்துக்கச் சொல்றீங்க. எங்கூட வந்த பொண்ணு தேவகி... கூட மாட வேலை செய்ய ஒத்தாசையா இருக்கட்டுமேன்னு கூட்டிட்டு வந்தோம்...'' என்றாள் மைதிலி.

தேவகி ஒரு கணத்திற்குத் திகைத்துப் போய் ''அப்படியா... சரி... சரி...'' என்று அரைமனத்துடன் சொல்லிவிட்டு அகன்று போனாள்.

''நீ பயமில்லாமச் சாப்பிடும்மா... ஒம் பேரு என்ன...?'' என்றாள் மைதிலி.

''அன்னபூரணி... அப்பா என்னை பூரணி பூரணின்னு கூப்பிடுவார்...''

''பொருத்தமான பேருதான்...'' என்றாள் மைதிலி, பரிதாபம் எஞ்சிய குரலில். அவள் இலையைப் பார்த்துவிட்டுச் சட்டென்று துணுக்குற்றாள். வாயில் போட்டவுடன் ரவை

# ரசித்த காட்சி

**போட்டி : 43.**

வெகுகாலம் முன்னரோ அல்லது அண்மையிலோ நீங்கள் பார்த்த சினிமா அல்லது நாடகத்தில் நீங்கள் மிகவும் விரும்பி ரசித்த காட்சியைக் கீழே வெற்றிடத்தில் எழுதி இந்த அரைப்பக்கத்தைக் கத்தரித்து அனுப்பவும். பிரசுரமானால் பரிசு. குலுக்கல் முறையில் ஒருவருக்குப் பட்டுப் புடைவை. உறையின்மேல் ''ரசித்த காட்சி'' என்று குறிப்பிடவும்.




முடிவு தேதி: 11.3.85.

இன்னும் 10 பட்டுப்புடைவைகளே பாக்கி. ஒன்றை அடைந்தே தீருவது என்ற உறுதியுடன் ஒவ்வொருவாரமும் போட்டியில் ஈடுபடுங்கள்.

என் பெயர்:..............................

விலாசம்:..............................

..............................

## பட்டுப்புடவை பரிசுத்திட்டம்

மாவாய்க் கரைந்த மைசூர்ப் பாகைக் காண வில்லை.

"நீ அதுக்குள்ளயா ஸ்வீட்டைத் தின் னுட்டே..."

"இல்லியே..." என்று அழகாய் இடதும், வலதுமாய்த் தலை ஆட்டிற்று. "என் இலேல வைக்கல..." என்றுள் பூரணி லேசான ஏமாற்றம் தொனிக்க.

"அப்படியா... கொஞ்சம் இரு..." என்று லேசாய்ச் சொடுக்குப் போட்டு எதிர்வரிசை யில் மைசூர்ப்பாகுடன் ஓடிக் கொண்டிருந்த வரைக் கூப்பிட்டாள் மைதிலி.

அரக்கப் பரக்க அருகில் வந்தார்.

"நீங்கதானே இந்த வரிசைக்கு மைசூர்ப் பாகு போட்டது?"

"ஆமாம்மா..." என்றார் பவ்யமாய்.

"அப்ப இந்தக் கொழந்தை மாத்திரம் என்ன பாவம் பண்ணிடுச்சி... அதுக்கேன் ஒரு ஸ்வீட் போடலே...?"

பெரியவர் பூரணி பக்கம் திரும்பினார்.

"ஒனக்கு மைசூர்ப்பாகு போட வாம்மா...?"

"என்ன கேள்வி? போட வேண்டியது தானே...? ஊர்லேருந்து கூட மாட ஒத்தா சையா இருக்கட்டுமேன்னு கூட்டிட்டு வந்தி ருக்கோம்... அதுக்கு ஒரு ஸ்வீட் போட்டா என்னவாம்? ஒங்க வீட்டுதா கொறைஞ்சு போகும்?"

"ஆமா... எங்க வீட்டுதுதான் கொறை யும்... ஒ விரிலே ஒண்ணு குறையும்... ஒனக்கு ஸ்வீட் போடணுமா பூரணி?"

"வேண்டாம்ப்பா..." என்றது குழந்தை. சட்டென்று இடப்புறமாய்ச் சாய்ந்து மைதிலி யின் காதில், "அப்பா... எங்கப்பா..." என் றது கிசுகிசுப்பாய். மைதிலி ஒரு திகைப் போடு நிமிர்ந்தாள்.

"ஆமாம்மா... என் பொண்ணுதான் இவ. பசி தாங்காது பாவம்... ஆறு விழுந்த பல்லு இன்னும் மொளைக்கலே, அதுக்குள்ள ஸ்வீட் லாம் சாப்பிட முடியாதபடிக்கு ஒரு நிர்ப்பந் தம்... இக்கறாண்டுக் குழந்தைக்கு ரத்தத் திலே சக்கரை... டாக்டராறு நெறைய காய் சாப்பிடணுங்கறார்... பழம் சாப்பிடுங்கறார்.. அரிசியைக் கொறைச்சுக்கோன்றார்..விட்டுச் சாப்பாட்டுல பச்சைக் காயும், பழமும் சேக் கறதுன்னு என்றுலெல்லாம் முடியுமாம்மா? அதான் சக்கரையும், பாயசமும் இல்லேன்னு லும் பசிக்காவது இதெல்லாம் சாப்டுக்கட் டுமேன்னு பாக்கறது... பந்தி முடிஞ்சு ஒள்ள வச்சுப் போடற வரைக்கும் இதுக்குப் பசி தாங்காது பாவம்... வர்ற இடத்திலே சில சமயம் இந்த மாதிரி ஆயிடறது..."

வாது திறந்துவிட்ட வாய் மூடாமல் பார்த் தாள்.

"பள்ளமும், மேடும் எங்கெங்கே இருக்கு பார்த்தீங்களா...?" என்றுள் மைதிலி வெற்றுச் சாதத்தை உருட்டிக் கொண்டே.

குழந்தை பிறந்த 6 மணி நேரத்திற்கு பின்பு, அது முதல் தடுப்பு ஆகாரம் பெறுகிறது. அதை ஊட்டுவது நீங்கள்தான்.



இயற்கையின் ஒரு வரப்பிரசாதம் தாய்ப்பால்.

தாய்ப்பாலில் இயல்பாகவே நோய் எதிர்ப்புப் பொருள் அடங்கியுள்ளது. புதிதாகப் பிறந்த குழந்தைக்கு, வயிற்றில் வாயுக்கோளாறு மற்றும் இதர நோய்களுக்கு எதிரே பாதுகாப்பு அளிப்பதில் முக்கிய பங்காற்றுகிறது தாய்ப்பால்.

## இயல்பான ஊட்டச்சத்து

இயற்கையும் அறிந்துள்ளது: குழந்தைக்கான தாய்ப்பாலே உன்னத உணவாக்குபவை அதில் இயல்பாக சரிவிகிதமாகக் கலந்துள்ள உடல் வளர்ச்சிச் சத்துக்கள் (புரதம்), சக்தி தரும் சத்துக்கள் (கார்போ ஹைட்ரேட்டுகள், கொழுப்பு) ஆரோக்கியமான பாதுகாப்புச் சத்துக்கள் (வைட்டமின்கள்) ஆகும் (உதாரணமாக தாய்ப்பால் குடிக்கும் குழந்தைகள் வைட்டமின் 'சி' குறைவினால் ஏற்படும் ஸ்கர்வி நோயால் பொதுவாக பாதிக்கப்படமாட்டார்கள்) முலைப்பால் உண்ட குழந்தை பாதுகாப்பையும் தன்னம்பிக்கையையும் பெறுகிறது. காரணம், பசியைத் தணித்திட குழந்தை முலைப்பாலை உறிஞ்சும்போது, நீங்கள் குழந்தையை அரவணைத்துப் பாசத்தையும் சேர்த்தல்லவா பாலூட்டுகிறீர்கள்.

## உலகளாவிப் பிரபலமடைகிறது.

அதன் ஊட்டச்சத்து மற்றும் இதர நலன்கள் விரிவாகவும் அதிகமாகவும் உணரப்படுவதால் மேலை நாடுகளிலும் கூட முலைப்பால் கொடுத்தல் மிகவும் அதிகமாக பிரபலமாகி வருகிறது.

உங்கள் உடல் நல பாதிப்பு அல்லது பால் பற்றுக்குறை ஆகியவற்றால் நீங்கள் குழந்தைக்கு பால் கொடுக்கமுடியாமல் போனால் என்ன செய்வது?

உங்கள் குழந்தைக்கு நீங்கள் சிறந்த 'தாய்ப்பால் மாற்று' தேர்ந்தெடுக்க வேண்டும்.

## ஸ்ப்ரே ட்ரை செய்யப்பட்ட அமுல்ஸ்ப்ரே

அமுல் ஸ்ப்ரே–நன்கு சமச்சீராக கலக்கப்பட்ட சத்துக்களுடன் கூடியது—பிரதம தரமுள்ள புரதம், ஜீரணிக்க எளிதான கொழுப்பு மற்றும் கார்போ ஹைட்ரேட்டுகள், சரியாகக் கலந்துள்ள வைட்டமின்கள் மற்றும் தாதுக்கள்.

ஏற்கனவே கொதிக்க வைத்த வெதுவெதுப்பான நீரில் அதைக் கலப்பது எளிது. முன்னாலேயே அதை பசைபோல் தயாரிக்கவேண்டிய அவசியம் இல்லை.

## சிக்கனமானது

டின்னில் அடைக்கப்பட்டுள்ள குழந்தை உணவுகளில் மிகவும் சிக்கனமானது, அமுல் ஸ்ப்ரே. காரணம், அது இந்தியாவின் 'வெண்மைப் புரட்சிக்கு' முன்னோடியான நவீன பால் நிறுவனத்தால் தயாரிக்கப்பட்டது.

ஆனால் கொதிக்க வைத்த நீர், சுகாதார முறையில் கிருமி நீக்கம் செய்யப்பட்ட பாத்திரங்கள் மற்றும் பால் புட்டிகள் உபயோகித்தலை உறுதி செய்து கொள்ளுங்கள். பால் கலக்கப்படும்போது அதிகம் நீராகி விடுவதை தவிர்ப்பதற்கும், போதுமான ஊட்டச் சத்துக்களை உறுதி செய்வதற்கும் டின்மீது குறிப்பிட்டுள்ள வழிமுறைகளை கவனமாக பின்பற்றுக.




# அமுல்ஸ்ப்ரே

**தாய்ப்பாலுக்கு அடுத்ததுதான்**

**இலவசம்! அமுல் வளர்ப்பு வழி—**
இதில் அடங்கியுள்ளவை: கருத்தரித்தல், பேறு காலத்திற்கு முன் கவனிப்பு, பிரசவம், தாய்ப்பால் ஊட்டுதல், வெளியில் கிடைக்கும் உணவு வகைகள், லேசான தானிய உணவு தருதல், குழந்தையின் அன்றாடக் கடன்கள், குழந்தையின் வளர்ச்சி, நோய்த் தடுப்பு, முதலுதவி, பொதுவான நோய்கள், நோயுற்ற குழந்தையைப் பாதுகாத்தல் ; தமிழ், இந்தி, மராத்தி, குஜராத்தி, ஆங்கிலம், தெலுங்கு மற்றும் மலையாள மொழிகளில்.

உங்கள் பெயர் மற்றும் முகவரியுடன் ரூ. 1.25 தபால் தலை ஒட்டி எழுதுக இம் முகவரிக்கு: தபால் பெட்டி எண் 10124, பம்பாய் 400 001.



விற்பனைக்கு விடுப்போர்:
குஜராத் கோ-ஆப்பரேடிவ் மில்க் மார்க்கெட்டிங் ஃபெடரேஷன் லிமிடெட்,
தபால் பெட்டி எண் 10, ஆனந்த் 388 001, குஜராத் மாநிலம்.

ASP/AS-TAM5/83

# நெருப்பு மலர்

## 30

மகாலக்ஷ்மி கோவிலில் தரிசனத்தை முடித்துக் கொண்டு வெளியே வந்த சாயிராமும், கிருத்திகாவும் கடற்கரை ஓரமாக, மௌனமாகவே நடந்தனர். அன்னை வேளாங்கன்னி ஆலயத்தைத் தாண்டியதும் சாயிராம்தான் கேட்டான்.

"ஏங்க, இப்படி உட்காரலாங்களா...?"

"நேரமாகலை...?" என்றபடி கைக்கடிகாரத்தைப் பார்த்தாள் கிருத்திகா. மணி ஐந்தரை ஆகியிருந்தது. ஆனாலும், இன்னமும் வெயில் தணியவில்லை. சுள்ளென்று முதுகைத் தாக்கிற்று. கடற்கரை ஓரமானதால் கூடவே ஜிலுஜிலுவென்று காற்றுவீச உஷ்ணமும், குளிர்ச்சியும் கலந்த இதமான ஒரு சூழ்நிலையை ஏற்படுத்தியிருந்தது.

அந்தச் சூழ்நிலைக்கும், அப்போதைய மனநிலைக்கும் வீட்டிற்குத் திரும்ப இஷ்டப்படாதவனாகச் சொன்னான் சாயிராம்.

"ஏங்க, இப்பவே போயி என்ன செய்யப் போறோம்...? வீட்ல சாமி கூட இல்லீங்களே...? எட்டு மணிக்கு மேலதானே வர்றதா சொல்லிட்டுப் போயிருக்கார்? அதனால் இங்க உட்கார்ந்து கொஞ்ச நேரம் பேசிட்டுப் போகலாமே...?"

"சரி" என்று உட்கார்ந்தாள் கிருத்திகா. அவளுககு எதிரில் சற்றுத் தள்ளி சாயிராமும் உட்கார்ந்து கொண்டான். அந்த நேரத்தில் கடற்கரை சந்தடியற்றுக் கிடந்தது. அந்தக் கடற்கரை எப்போதுமே சந்தடியற்றுத்தான் இருக்கும். அதிகக் கூட்டமிருக்காது. அதனாலேயே சாயிராமிற்கு மிகவும் பிடித்த இடம். அன்றும் உட்கார்ந்து வானத்தையும், மூட்டை மூட்டையாக நகருகிற மேகங்களையும், சமுத்திரத்தையும் மாறி மாறிப் பார்த்தபடி மௌனமாக இருந்தவன் பின் சடாரென்று திரும்பி அவளைப் பார்த்துக் கேட்டான்.

"ஏங்க, கவிதைகளைப் படிக்கிறதாகச் சொல்லி என்கிட்டேயிருந்து நோட்டுப் புத்தகத்தை வாங்கி வச்சுக்கிட்டீங்களே, படிச்சீங்களா, உங்க அபிப்பிராயம் என்ன...?"

அவனின் அந்தக் கேள்விக்கு கிருத்திகா உடனே பதில் சொல்லிவிடவில்லை. குற்ற உணர்வுடனும், மன்னிப்புக் கேட்கிற பாவனையிலும் பார்வையை உயர்த்தினாள். பின்னர் நிதானமாகச் சொன்னாள்.

"ஐயாம் ஸாரி சாயிராம்.. நீங்க என்னை மன்னிக்கணும். உங்க கவிதைகளில் ஒன்றைக் கூட என்னால் படிச்சு முடிக்க முடியலை. நோட்டைத் திறந்து படிக்க உட்கார்ந்தால் மனசு எங்கெங்கோ அலைபாயறது... எண்ணங்கள் ஒவ்வொன்றாகப் படிப்படியாக வந்து கவனத்தைக் கலைக்கிறது... இத்தனை நாளா வச்சுண்டிருந்து படிக்கலைன்னு சொல்றதுக்கே வெட்கமாக இருக்கு..."

"ஐயோ என்னங்க நீங்க...?" படபடவென்று குறுக்கிட்டான் சாயிராம். "உங்க அபிப்பிராயத்தைத் தெரிஞ்சுக்கலாம்னு கேட்டேனே தவிர வேற எதுக்கும் இல்லீங்க. ஏங்க, உங்ககிட்டே ஒண்ணு கேட்டால் தப்பாக நினைச்சுக்க மாட்டீங்களே...?"

"என்ன சாயிராம் இப்படிக் கேட்கறீங்க..? தப்பான எதையும் நீங்க கேட்க மாட்டீங்கன்னு எனக்குத் தெரியும், அதனால் தைரியமாகக் கேளுங்க..."

"வந்துங்க... கொஞ்ச நாளாகவே உங்க முகம் சரியாக இல்லை... அதுவும் இரண்டு மூன்று தரம் டில்லிக்கு டெலிபோனில் பேசிவிட்டு வந்ததிலிருந்து இன்னமும் மாறிப் போயிருக்கு. நீங்க பகிர்ந்துக்காமல் போனாலும் உள்ளுக்குள் ஒரு சோகம் அழுத்திக்கிட்



டிருக்கிறது புரியறது. அதுக்குக் காரணம் தெரியலே. அம்மாவை விட்டு இப்படித் தனியாக, எங்களையெல்லாம் சாகவதயாக நினைச்சுட்டு இருக்கிறதுக்குக் காரணம் புரியலே...''

அதைக் கேட்டு மெலிதாய்ப் புன்னகை புரிந்தாள் கிருத்திகா.

''ஏன் நீங்க சாகவதயா இருக்க மாட்டீங்களா...?''

''இதோ பாருங்க. இந்த உடம்பில் உயிர் இருக்கிறவரை உங்களுக்கு ஒரு துணையா, பாதுகாப்பா, சாகவதயா இருப்பேங்க. கூடப் பிறந்தவனா — வேண்டாங்க — ஒரு நல்ல நண்பனாக் கடைசிவரை இருப்பேன். அதுல ஒரு சந்தேகமும் இல்லீங்க. இது சத்தியம். நான் எழுதற எழுத்துக்கள் மேல் சத்தியம். வேணும்னாப் பாருங்க—''

''என்ன சாயிராம் நீங்க... எதைச் சொன்னாலும் இப்படி உணர்ச்சிவசப்படறீங்க...?''

''உங்க விஷயத்துலதாங்க இப்படி மாறிப் போறேன். ஒருவேளை போன ஜென்மத்தில் உங்க வீட்டு நாய்க்குட்டியா இருந்தேனோ என்னவோ...?''

''போங்க சாயிராம்...'' என்றவள் சட்டென்று வித்தியாசமாய் மாறிப் போனாள். ஒரு பொறுப்பு தெரியப் பேசினாள்.

''நீங்க கேட்ட கேள்விக்குப் பதில் சொல்லணும்னால் நான் என்னைப் பற்றிய எல்லா விஷயங்களையும் சொல்லணும். அம்மாவைப் பற்றி, விஷ்ணுபிரசாத் பற்றி, அப்புறம் பாஸ்கரப்பா பற்றி, அர்ஜுன் பற்றி, ராம்சிங் பற்றி...''

''சொல்லக் கூடாதுன்னு நீங்க நினைத்தால் வேணாங்க...''

''அதெல்லாம் ஒண்ணுமில்லே சாயிராம். எங்கே தொடங்கி எப்படித் தொடரலாம்னு தான் யோசிக்கிறேன்'' என்றவள் ஒரு வினாடிக்குப் பின் ஒரு ஆரம்பம் கிடைத்துவிட்ட மாதிரி படபடவென்று சொல்ல ஆரம்பித்தாள். அம்மா தன்னை டில்லிக்கு அனுப்பியது, ரயிலில் அர்ஜுனைச் சந்தித்தது, அவனை நேசிக்க ஆரம்பித்தது, அவன் தன்னை விரும்பியது, இடையில் விஷ்ணுபிரசாத் குறுக்கிட்டது, அம்மாவிற்கும், அவனுக்கும் இருந்த உறவு எதையும் மறைக்காமல் சொல்லிமுடித்தாள்.

''உங்களை மாதிரி கவிஞர்கள் பெண்களை மலருக்கு ஒப்பிட்டாலும் கூடவே நெருப்பாக இருக்கணும்னு நினைக்கிறவள் நான். அக்கினிக்குத்தான் எதையும் எரிச்சுப் பஸ்மமாக்குகிற சக்தி உண்டு. அந்த மாதிரி தன்னைத் தப்



இந்துமதி



பாக ஒருமுறை பார்த்தால் கூட அந்த எண்ணத்தை அப்படியே பொசுக்கிச் சாம்பலாக்கிடணும். நிலம், நீர், காற்று, ஆகாயம் இந்த நான்கிலும் எதாவது ஒட்டிக் கொள்கிற வசதி இருக்கு. ஜீவராசிகள் உயிர்வாழ்கிற சந்தர்ப்பம் இருக்கு. அந்த மாதிரி நெருப்பில் எதுவாவது உயிர்வாழ முடியுமா? எந்த ஜீவராசியாவது ஒட்டிக் கொள்ள முடியுமா?... அதனிடம் அண்ட நினைத்தால் பொசுக்கி விடாதா...? அதனால்தான் அந்த நெருப்பு மாதிரி இருக்கணும்னு நினைக்கிறேன். மலர் மாதிரி அழகும், மென்மையும், நெருப்பு மாதிரித் தீமையைப் பொசுக்குகிற தன்மையும் இருந்துவிட்டால் போருதா சொல்லுங்கள்...?''

''என்னங்க இவ்வளவு ஆவேசமாகப் பேசறீங்க...? உங்களுக்குள் இத்தனை ஆவேசம் கூட இருக்கிறதா என்ன...?''

''பாதிக்கப்பட்டால் ஆவேசம் தானாக வரும். அம்மா அம்மாவாக இல்லாதது போகட்டும். ஒரு பெண்ணாகக் கூட இல்லாததுதாங்க என்னை ரொம்பக் கஷ்டப்படுத்துகிறது. அதனால்தாங்க அவளை விட்டுப்பிரிந்து இப்படித் தனியாக இருக்கேன். இன்னும் கொஞ்ச நாள்தான். பஞ்சாபிலிருந்து அர்ஜுன் திரும்பி வந்ததும் டில்லிக்குக்கிளம்பிடுவேன்.... ஆனால் அப்பா சொன்னதைக் கேட்டதிலிருந்து — ஒரு வாரமாகத் தூக்கம் வரலை. சாப்பிடப் பிடிக்கலை. மனசுக்குள் ஏதோ ஹிம்ஸையாக அலைக்கழிக்கிறது...''

''அப்பான்னு நீங்க யாரைச் சொல்றீங்க...? மிஸ்டர் பாஸ்கரப்பாவைத் தானே...?''

''ஆமாம்.''

''அப்படி என்ன சொன்னார் அவர்...?''

''அர்ஜுன் பற்றி ஒரு தகவலும் இல்லைன்னு சொன்னார். பஞ்சாபை எந்தவிதத்திலும் தொடர்பு கொள்ள முடியலைன்னார்...''

''அவ்வளவுதானே...? இதற்கா வருத்தப்படறீங்க...? ஏங்க, தினமும் செய்தித்தாள்களில் போடறான். ரேடியோவும், டி.வி.யும் பஞ்சாப், பஞ்சாப்னு அலறுது... பிந்தரன்வாலேயையும், அவருடைய ஆட்களையும் அடக்கிவிட்டு, இன்னும் இரண்டே நாட்களில் வந்துவிட மாட்டாரா உங்கள் அர்ஜுன்...?''

''அப்படி வரணும்னுதான் நானும் காத்துக் கொண்டிருக்கேன்...''

''பஞ்சாபிற்குள் ராணுவம் நுழைந்ததாகச் செய்தி வந்து ஐந்தாறு நாட்களாகிவிட்டன. தீவிரவாதிகளை அடக்க இதுவே அதிகம். அதற்கப்புறம் உங்கள் அர்ஜுன் உங்களைத் தேடி வரப்போகிறார் பாருங்கள்...''

அவனது ஆறுதல் வார்த்தைகள் மனத்தைச் சற்றே லேசாக்கச் சுற்றிலும் இருட்டுக் கவிந்து கிடப்பதை உணர்ந்து புடவையில் ஒட்டிக் கொண்டிருந்த மணலைத் தட்டிக் கொண்டே எழுந்த கிருத்திகா ''போகலாமா...?'' என்றாள்.

'மறுவார்த்தை பேசாமல் எழுந்து கூட

நடந்த சாயிராம் சிறிது நேரத்திற்குப் பின் கேட்டான்.

"ஏங்க, கல்யாணம் எப்போ இருக்கும்...?"

"ம்... அர்ஜுன் வந்த உடனே வைத்துக் கொண்டு விடலாம் என்றுதான் அப்பா சொன்னார்..."

அடுத்த சில நிமிடங்கள் மௌனமாக இருந்த சாயிராம் மெதுவாக அவளைப் பார்த்தான்.

"கல்யாணமான பின் எங்களை எல்லாம் விட்டுவிட்டு டில்லிக்குப் போயிடுவீங்க இல்லையா...?"

"கல்யாணமே டில்லியில்தான் நடக்கும் சாயிராம். நீங்க எல்லோரும் வரணும். முக்கியமா நீங்க என் கூடவே வரணும்னு நான் நினைக்கிறேன்..."

"உங்க கூடவே வர்றது மட்டுமில்லீங்க. உங்க வீட்டுலேயே இருந்துடலாம்னு நினைக்கிறேன். நீங்க கொஞ்ச முன்னால் சொன்னீங்களே ராம்சிங்குன்னு அவருக்கு வயசாகியிருக்கும் இல்லீங்களா...? அதனால் அவரை ஓய்வெடுத்துக் கொள்ளச் சொல்லிட்டு அந்த இடத்துல நான் இருந்துடலாம்னு முடிவு பண்ணியிருக்கேன்..."

"என்ன பேசறீங்க நீங்க. அப்பா கூட இரும்பு அடிக்கப் பிடிக்காமல் வந்தீங்கன்றது ஞாபகமிருக்கட்டும். நீங்க இங்கே வந்தது கவிதைக்காக. கிருத்திகாவுக்காக இல்லே.."

"இருக்கலாம். ஆனால் மனித அன்புக்கு முன்னால் கவிதை, கதை எதுவும் முக்கியமில்லீங்க. உங்க அன்பும், பாசமும் என்னை முளை அடிச்சுக் கட்டிப் போட்டுவிட்டது. இனி அந்த முளையைச் சுற்றிச் சுற்றித்தான் வட்டமடிச்சுகிட்டிருப்பேன். நீங்களா விரட்டினாலும் போக மாட்டேன்."

"வேண்டாம் பேசாதீங்க..." என்று உருகிப் போய்க் காதைப் பொத்திக் கொண்டாள் கிருத்திகா. மனசு நிறைந்தாற்போல் கிடந்தது.

அந்த அமைதி அடுத்த நாலைந்து நாட்களும் தொடர்ந்தது. பிந்தரன்வாலேயும், அவரது ஆட்களும் பொற்கோவிலில் இறந்து கிடந்த செய்தியும், பஞ்சாபில் ராணுவ நடவடிக்கை முடிவடைந்ததற்கான செய்தியும் தினசரிகளிலும், வானொலியிலும், தொலைக்காட்சிப் பெட்டியிலும் வர கிருத்திகா இன்னமும் சந்தோஷித்துப் போனாள்.

ஆனால் அத்தனை சந்தோஷமும், சிரிப்பும், உற்சாகமும் மூன்றாம் நாள் காலையில் பலூன் வெடித்த மாதிரி வெடித்துப் போயிற்று. காரிலிருந்து இறங்கிய அம்மாவையும், பாஸ்கரப்பாவையும், ராம்சிங்கையும் பார்த்த கிருத்திகா ஒரு வினாடி ஒன்றும் புரியாமல் திகைத்து நின்றாள்.

உள்ளே வந்த பாஸ்கரப்பா குமுறுகிற குரலில் சொன்னார்.

"அம்மா கிருத்திகா. மனசை நீ தேற்றிக்கணும். திடமாக்கிக்கணும். ஒரே பிள்ளையைப் பறிகொடுத்துவிட்டு நான் நிற்கிறேனே, அதே மாதிரி நீயும் கல்லாக நிற்கக் கற்றுக்கணும்..."

அதைக் கேட்ட பின்பு அழுகிற சக்தியற்று—அந்தச் செய்தியை நம்புகிற திராணி கூட அற்றவளாக அப்படியே உறைந்துபோனாள் கிருத்திகா....

(தொடரும்)

நீங்கள் உங்கள் பாஷனைக் கொஞ்சம் மாற்றினால்தான் உங்களைத் திருமணம் செய்து கொள்வேன். முதலாவது ஹெயர் ஸ்டைலை மாற்ற வேண்டும்!
உனக்காக நான் எதையும் செய்யத் தயார் அன்பே!
இனிமேல் மீசையும், டிரஸ்ஸும் மாடர்ன் ஆக மாறவேண்டும்!
இது என்ன பிரமாதம்! கண்டிப்பாக மாற்றுகிறேன்!
இப்பொழுது உங்களைப் பார்த்தால் ஒரு சினிமா நடிகன் மாதிரி இருக்கிறீர்கள்!
உண்மையாகவா! அந்தப் பெருமை எல்லாம் உன்னையே சேரும்!
இனிமேல் ஒரு நடிகையையே திருமணம் செய்து கொள்ளலாமா என்று யோசிக்கிறேன்!

# இது இருபதாம் நூற்றாண்டு

அறையில் பகல் உணவை முடித்துக் கொண்ட கல்லூரி முதல்வர் சுந்தரேசன் பல் குத்திக் கொண்டே பியூன் மாணிக்கத்தை அனுப்பி முதலாண்டு பாலஜி மாணவி பத்மினியை வரவழைத்தார். "இது கோ—எட் காலேஜ். இங்கே இப்படியெல்லாம் லோ—கட் போட்டுட்டு வரக் கூடாது. அண்டர் ஸ்டாண்ட்? போ" என்றார். பிற்பகல் வகுப்புகள் தொடங்குவதற்கு முன்னால் கல்லூரித் தோட்டத்தை ஒரு சுற்றுப் பார்த்துவிட வேண்டும் என்று எழுந்து வராந்தா பக்கமாய்ச் சென்றார்.

அப்போதுதான் அந்த நெடி மூக்கைத் துளைத்தது. முதல்வர் சுந்தரேசனால் நம்ப முடியவில்லை. சுவாசத்தை ஆழமாய் இழுத்து, நெடியை உறுதி செய்துகொண்டு கோபத்துடன் 'ஆசிரியர் அறை'க்குள்ளே நுழைந்தார்.

பரஞ்சோதி கலைக்கல்லூரிக்கு ஆறு வயது தான் ஆகிறது. நான்கு பட்ட வகுப்புகளும், இருபது ஆசிரியர்களும் கொண்ட இளம் கல்லூரி. உள்ளூர் மில் அதிபரின் சொந்த நிர்வாகத்தின் கீழ் உள்ளது. ஒரு பெரிய கூடம்தான் ஆசிரியர் அறை.

அங்கங்கே மடக்கு நாற்காலியில் அமர்ந்து பாடக்குறிப்பு எழுதிக் கொண்டும், டிரான்சிஸ்டரில் கிரிக்கெட் கேட்டுக் கொண்டும் இருந்த பேராசிரியர்கள் முதல்வரைப் பார்த்ததும் மெதுவாய் எழுந்தார்கள்.

முதல்வரின் பார்வை ரீ—டிப்ளாய்மெண்டில் வந்து சேர்ந்த தத்துவத் துணைப் பேராசிரியர் மோகனின் வலது கையில் நிலைகுத்தி நின்றது. சிகரெட்!

"வாட் சஸ் திஸ்?" என்றார்.

"சார்மினார் சார்."

லேசான சிரிப்பலைகள் எழுந்து அடங்கின.

"ஐ நோ இட்... திஸ் இஸ் ஸ்டாஃப் ரூம்... இங்கே சிகரெட் குடிக்கக் கூடாதுன்னு உங்களுக்குத் தெரியாது...?"

"சார்... இது லஞ்ச் டைம்... இப்போ இங்கே சிகரெட் குடிக்கலேன்னா எங்கே சார் குடிக்கறது...? பாத்ரூம்லயா...?"

"மிஸ்டர் மோகன்... இது காலேஜ்... நம்ப தொழில் இளம் மாணவர்களுக்குச் சொல்லிக் கொடுக்கறது... ஸோ, காலேஜ் எல்லைக்குள்ளே நீங்க சிகரெட் குடிக்கறது தப்பு..."

"எப்படித் தப்பு?"

"ஒவ்வொரு தொழிலுக்குமே சில தர்மம் இருக்கு... இந்தத் தொழிலுக்கு இப்படிக் கட்டுப்பாடா இருக்கறது தர்மம்..."

அது உங்களுடைய தனிப்பட்ட கருத்தா இருக்கலாம் சார்... மெட்ராஸ்லே நான் வேலை பார்த்த காலேஜ்லே ஸ்டாஃப் ரூம்லே சர்வ சாதாரணமா எல்லோரும் சிகரெட் குடிப்போம்... பிரின்சிபாலே எங்கிட்டே வந்து தீப்பெட்டி வாங்கிட்டுப் போவார்.."

"ஓகோ! அப்ப இந்தப் பழக்கத்தை உங்க மெட்ராசோட நிறுத்திக்கங்க... இது சின்ன ஊர்லே இருக்கற சின்ன கல்லூரி... உங்க மெட்ராஸ் நாகரீகத்தையெல்லாம் இது தாங்காது..."

"யூ மீன்... ஸ்டாஃப் ரூம்லே சிகரெட் குடிக்கக் கூடாதுன்னு நிஜமாகவே சொல்றீங்களா சார்...? டாக்டர்கள் ஜி. எச்.லே அவங்களோட ஓய்வறையிலே, ஸ்டேஷன் மாஸ்டர்கள் ஸ்டேஷன்லே குடிக்கறாங்க... நாங்க டீச்சர்கள் மட்டும் என்ன பாவப்பட்ட ஜன்மங்களா...?"

முதல்வர் ஒருகணம் திகைத்தார். இந்த இளைய தலைமுறையினர் ரொம்பவும்தான் வாதாடுகிறார்கள்...

"மிஸ்டர் மோகன்... மத்த தொழிலுக்கும் நம்ம ஆசிரியர் தொழிலுக்கும் ஒரு வித்தியாசம் இருக்கு... பையன்களுக்குப் பாடம் சொல்லித் தர்றதோட நம்ம கடமை முடிஞ்சு போயிடல்லே... நல்ல பழக்கங்களை நம்ம நடத்தையினாலே அவங்க மனசிலே பதிய வைக்கணும்..."

மோகன் சிகரெட்டை ஒரு உறிஞ்சு உறிஞ்சிப் புகையை வழியவிட்டபடி சிரித்தார்.. "சார்... இது இருபதாம் நூற்றாண்டு... எல்லோரும் எல்லா விஷயங்களையும் தாங்களாகவே கத்துக்கற காலம்... அதுவும் ஆசிரியர்களைப் பார்த்து நல்ல வழக்கத்தைப் பழக்கிக்கறதுக்கு இது ஒண்ணும் எலிமெண்டரி ஸ்கூல் இல்லே... காலேஜ். உங்களையும் என்னையும் விடப் பையங்க எத்தனையோ விஷயங்களைத் தெரிஞ்சு வைச்சிருக்காங்க..."

"எல்லாம் எனக்கும் தெரியும்... எது எப்படி இருந்தாலும் நம்ம காலேஜ் காம்பவுண்டுக்குள்ளே ஒரு டிஸிப்ளின் இருக்கணும்... இன்னைக்கு ஆசிரியர் அறைக்குள்ளே நீங்க சிகரெட் குடிச்சா நாளைக்கு கான்டீன்லே பையன் கஞ்சா அடிப்பான்... நம்ம கல்லூரியிலே இதுவரைக்கும் எல்லா ஆசிரியர்களும் கட்டுப்பாடான நடைமுறையைப் பின்பற்றி வந்தாங்க... புதுசா போன வாரம் வந்து சேர்ந்த நீங்க இதைக் கெடுத்துடாதீங்க... இனிமே இங்கே சிகரெட் குடிக்காதீங்க..."

-முத்து. தங்க. ஐயப்பன்

"சார்... இது வேண்டுகோளா... இல்லை ஆர்டரா?"

"ஆர்டர்தான் போடணும்னு உடனே போய் சர்க்குலர் அனுப்பறேன்..."

"அப்பிடி ஆர்டர் போட்டு எங்க நியாயமான உரிமையிலே நீங்க தலையிடறதா இருந்தா அதை எதிர்த்து நான் தனி ஆளாவே போராடுவேன்... அப்புறம் உங்க இஷ்டம்..."

முதல்வர் சுந்தரேசன் திடுக்கிட்டார். போராட்டம்! எத்தனை புனிதமான வாள்! வீர வாளைச் சில நேரங்களில் விருப்புக்காகவே சுழற்றிவிடுகிறார்களோ...?

முதல்வர் சுந்தரேசன் மனம் தளர்ந்துவிட்டார். ஏற்கனவே யூனியன் தேர்தலினால் மாணவர்களிடையே யூனியன் போய் அடிக்கடி சில்லறை வேலை நிறுத்தங்கள்... இதில் ஆசிரியர்களும் அமைதியிழந்தவர்களாய் வேலை பார்த்தால் நிலைமை என்ன ஆகும்...?

எதில் கோளாறு...? எங்கே சிக்கல் இருக்கிறது...? பழைய தலைமுறைதான் பத்தாம் பசலித்தனமாய் இருக்கிறதா? அல்லது புதிய தலைமுறைதான் புரட்சிப் பாதையில் போகிறதா?

முதல்வர் சுந்தரேசன் தலைகுனிந்தபடி அறையை விட்டு வெளியேறிய போது மோகவிட்டம் சிகரெட் வாங்கிப் பற்ற வைத்தார் தமிழ்ப் பேராசிரியர் மெய்யப்பன்.

* * *

"சித்ரா... வயிறு ரொம்பவும் பசிக்குது" தத்துவத் துறைப் பேராசிரியர் மோகன் தம் வீட்டில் ஏழாவது தடவையாய் உணவுக்குக் குரல் கொடுத்தார்.

"கொஞ்சம் பொறுங்க... சித்ரஹார் முடியட்டும்."

மோகன் டைனிங் டேபிளில் உட்கார்ந்தபடி பல்லைக் கடித்தார். வீட்டில் டி.வி. வாங்கி



யாது பார்த்தனர். இந்தத் தொல்லைக்காட்சி வந்ததிலிருந்து சித்ராவின் இரவுச் சாப்பாடு சாப்பிடுவது போராட்டமாய் இருக்கிறது...

ஒருவழியாய் ஒன்பது மணி ஆன பிறகு சித்ரா சிடுசிடுவென்று வந்தாள். "இப்பதான் தொணதொணன்னு அறுக்கறது... அப்படி என்ன பசி...? சாப்பாடு வேணும்னு இங்கேயே வைச்சு இருக்கலே... எடுத்துப் போட்டுச் சாப்பிட வேண்டியதுதானே...?"

மோகன் ஒன்றும் பேசவில்லை. என்ன பேசுவது... வருகிற மனைவி மொத்தமாய் வரதட்சணையோடு வரவேண்டும்... அப்புறம் மாதா மாதம் கைநிறையச் சம்பளமும் வாங்கித் தரவேண்டும் என்று பேராசைப் பட்டுக் கல்யாணம் செய்தாகிவிட்டது... ஆசைப்பட்டவற்றில் என்னவோ திருப்தி தான்... மற்ற விஷயங்களில்...?

பட்பட்டென்று மேஜையில் தட்டுக்கள் அணிவகுத்து அமர்ந்தன. சாதத்தைக் குழம்பில் புரட்டி வாயில் வைத்த மோகன் தூவென்று துப்பினார். "ஏய்.. என்ன இது?" என்று முகம் சுளித்தார்.

"ஏன்... நீங்க நாலு நாளாய்க் கேட்டுத் தொந்தரவு பண்ணின வெந்தயக் குழம்பு தானே...?"

"அது தெரியுது... ஏன் இப்படி மண்ணு மாதிரி இருக்கு...?"

"ம்... நாவல் படிச்சுக்கிட்டே சமையல் பண்ணினேன்... நல்லாத்தான் இருக்கு... பேசாம சாப்பிடுங்க..."

"வெந்தயக் குழம்புன்னு காரசாரமா, மணமா, சாப்பிடறப்பவே பசியைக் கிளப்பு கிற மாதிரி இருக்க வேணாமா... நாக்குலே வைச்சதுமே இப்படித் தூன்னு துப்புற மாதிரியா வைக்கிறது...?"

"அதுக்கு நான் என்ன செய்யட்டும்... காலையிலேருந்து சாயந்திரம் வரை ஆபீஸ்லே மிஷின் மாதிரி உழைச்சுட்டுச் சாயந்தரத்துக்கு மேலே வீட்டிலேயும் வந்து உழைக்கிறேன்... வீட்டுக்குச் சமையல்காரியும் வைச்சுக்கக் கூடாதுன்னு சொல்றீங்க... போனாப் போறதுன்னு ஒரு கடமைக்காகச் சமைச்சா அதிலேயும் குற்றம் சொல்றீங்களே..."

"அதுசரி! அம்மா மகராசி... சமைக்கிறது உன் கடமைன்னு ஒத்துக்கிட்டேல்லே.... அது வரைக்கும் சந்தோஷம்... செய்யற கடமையைக் கொஞ்சம் பொறுப்போட நீயா அக்கறையெடுத்துச் செய்யலாமில்லே? வயித்துக்கு மட்டுமா சாப்பாடு... நாக்குக்கும் ருசி வேணாமா?"

"இதோ பாருங்க... என்னால இவ்வளவு தான் முடியும்... முடிஞ்சாச் சாப்பிடுங்க... இல்லாட்டித் தட்டை வைச்சுட்டு எந்திரிச்சுடுங்க..."

"இப்படிப் பொறுப்பில்லாம பேசாதே சித்ரா... நீ மனசு வைச்சா உன்னாலே பிரமாதமாச் சமைக்க முடியும்... என்னைப்பத்தின அக்கறை இல்லாததினாலேதான் இப்படி ஏனோதானோன்னு செய்யறே...?"




"அக்கறையா...? பணத்துக்காக என்னைக் கல்யாணம் பண்ணி என்னைச் சக்கையாய்ப் பிழியற உங்க மேலே எனக்கு எப்படி அக்கறை வரும்?"

மோகனுக்குத் திக்கென்றது. காரணமில்லாமல் கோபம் வந்தது.

"இதோ பார்... சீரியசாச் சொல்றேன்... இனிமே சமையல் ரூம்லே கதை, கிதை படிச்சியோ உதைதான் கிடைக்கும்..."

"ஒகோ... அவ்வளவு தூரத்துக்கு ஆயிடுச்சா... எங்கே, உதைச்சுப் பாருங்களேன்... ஆபீஸ்லே உழைக்கிற எனக்கு வீடுங்கறது ரெஸ்ட் ரூம் மாதிரி.. இங்கே எனக்குப் பிரைவசி வேணும்... சுதந்திரம் வேணும்... என் இஷ்டப்படி இங்கே ட. வி. பார்ப்பேன்... கதை படிப்பேன்... இது இருபதாம் நூற்றாண்டு... உங்க இஷ்டத்துக்கெல்லாம் அடிமையாய்ப் பாத்துகிடக்க என்னாலே முடியாது... மிஞ்சினா உங்க தயவில்லாமலே என்னாலே தனியா வாழ முடியும்.... பி பிராக்டிகல்..." மோகன் வாயடைத்து நின்றான்.

"சார்... நீங்க சொன்ன மாதிரியே ஸ்டாஃப் ரூமுக்குள்ளே ஏழெட்டுப் பேர் சிகரெட் பிடிக்கறாங்க சார்..." பியூன் மாணிக்கம் உளவறிந்து வந்த தகவலை உற்சாகமாய் முதல்வரிடம் தெரிவித்தான்.

முதல்வர் சுந்தரேசன் பெருமூச்சுவிட்டார். "ஹூம்... மிஸ்டர் மோகன்தான் எல்லோருக்கும் சிகரெட் விநியோகம் பண்றாரா...?"

"இல்லே சார்... அதுதான் ஆச்சர்யமா இருக்கு... அவர் சிகரெட்டையே தொடலே... மத்தவங்க கொண்டு வந்து நீட்டினதுக்கும் வாங்க மறுத்து இன்னையிலேருந்து சிகரெட் பிடிக்கறதையே விட்டுட்டதாச் சொல்றார் சார்..."

முதல்வர் சுந்தரேசன் முகத்தில் ஒரு ஒளி வீசியது.

# வட்ட மேஜை




* குன்னக்குடி பற்றிய கட்டுரை படித்தேன். கச்சேரிக்கு ஜனரஞ்சகம் தேவைதான் ஆனால் ஜனரஞ்சகம் மட்டுமே கச்சேரி ஆகிவிடாது. இராக எல்லைகளை விட்டுவிட்டு அவர் அடிக்கும் கூத்துக்களைக் கேட்டு வருந்துபவர்களில் நானும் ஒருவன்.

குரோம்பேட்டை, க. கோ. கௌதமன்.

* வயலின் வித்வான் குன்னக்குடி வைத்தியநாதனின் இனிமையான பேட்டியும், கண்ணைக்கவரும் வண்ணப்படமும் கல்கியின் தரத்தை மேலும் ஒரு படி உயர்த்திவிட்டது!

ஈரோடு—10, மேஜர்தாசன்.

* கார்ட்டூனிஸ்ட் மாரியோ தன் முகத்தை வரைந்ததை — நான் வரைந்து அனுப்பியுள்ளேன். இது எப்படி இருக்கு?

மயிலாடுதுறை, தேரழுந்தூர் சி. சுப்பு.

* சில பக்கங்களில் தெளிவுபடுத்தப்பட வேண்டிய விஷயங்கள், கார்ட்டூனில் கச்சிதமாக, சிந்திக்கும்படி அமைத்துவிடுகிறீர்கள்! சென்ற இதழில் வெளியான மூன்று கார்ட்டூன்களும் அருமை. ஓவியர் உமாபதிக்கு எனது பாராட்டுதல்கள்.

சென்னை—15, இரா. சி. இரஞ்சன்.

* குடியரசு தினத்தன்று அமைச்சர்களும், இதர முக்கிய பிரமுகர்களும் பங்கேற்ற 'மெரினா' விழாவில் வண்ண உடை தரித்த மாணவ, மாணவிகள் வந்த ஊர்வலத்தில் தேசிய ஒருமைப்பாடு, இளைஞர் ஆண்டு, குடியரசு — இவற்றை எல்லாம் விவரிக்கும் எனது பாடல் மூன்று நாலு தடவை 'மைக்' மூலம் ஒலிபரப்பப்பட்டது. இதற்காகத் தமிழக அரசு அதிகாரிகள் என்னிடம் ஒப்புதலும் பெற்றுச் சென்றனர். ஆனால் ஒருமுறை கூட என் பெயரை மைக்கில் அறிவிக்கவில்லை! பெயர் அறிவிக்கப் போவதாகக் கூறிச் சென்றும் மைக்கில் அறிவிக்காதது இரட்டிப்புத் துயர் தந்தது. இசை அமைப்பாளர் தாயன்பனும் ஏமாற்றத்துக்குள்ளானார்.

சென்னை—90, கவிஞர் வேதம்.

* 3.2.1985 தேதியிட்ட கல்கி இதழில் ''மண்டபம் முகாம்'' என்ற தலைப்பில் கட்டுரை பார்த்தேன். அங்கு, கடந்த ஆகஸ்ட் மாதம் முதல் ''சேர்விஸ்'' என்ற ஸ்தாபனம் 400—க்கும் மேற்பட்ட 5 வயதுக்குட்பட்ட குழந்தைகளுக்கும் பலவீனமாக இருக்கும் தாய்மார்களுக்கும், வயோதிக நிலையில் இருக்கும் அன்பர்களுக்கும் தினந்தோறும் காலையும், மாலையும் ஆவின் பாலைக் காய்ச்சி, சீனி போட்டுக் குடிக்கப் பக்குவமாக ஒய். எம். சி. ஏ., ஒத்துழைப்புடன் கொடுத்துவருகிறது.

மண்டபம், இராஜசேகரன் (செயலர்).

* உலக நலனில் அக்கறையுள்ள ஒவ்வொரு இந்தியக் குடிமகனின் மன உணர்ச்சிகளை அப்படியே பிரதிபலித்தது 'உலகம் உய்ய ஒரே வழி' தலையங்கம். வல்லரசுகள் இனியாவது சிந்திக்கட்டும்!

சென்னை—5, எஸ். சம்பத்குமார்.

* அரசியல்வாதிகளுக்கும், நடிக, நடிகையருக்கும், முன்னணிக் கதாசிரியர்களுக்கும் தரப்படும் முக்கியத்துவத்தில் நூறில் ஒரு பங்கு கூடக் கார்ட்டூனிஸ்டுகளுக்குக் கொடுக்கப்படுவதில்லை. எனவே மாரியோ பேட்டி மிகவும் மனநிறைவு தந்தது.

வெ. சீதாராமன்.

## பாடநூல் போதிக்கும் முட்டாள்தனங்கள்

* தமிழ்நாடு அரசாங்கத்தால் வெளியிடப்படும் பாடப் புத்தகங்கள் மிகவும் தரம் தாழ்ந்ததாகவும், தவறுகளைப் போதிப்பதுமாக உள்ளன. உதாரணமாக 1983—ம் ஆண்டு வெளியிடப்பட்டதும், ஏழாவது வகுப்புக்குத் துணைப்பாட நூலாக இருப்பதுமான ''குமரி முதல் இமயம் வரை'' என்ற புத்தகத்தின் வழியாகப் போதிக்கப்படும் சில முட்டாள்தனங்களைப் பார்ப்போம்:

கன்னியாகுமரி அம்மனின் ஆலயத்தில் கல் தூண்களைத் தட்டினால் இசையின் ஏழு ஸ்வரங்களும் ஒலித்து, நம்மை வியப்பில் ஆழ்த்தும் என்கிறது புத்தகம். ஆனால் இத்தகைய தூண்கள் சுசீந்திரம் தாணுமாலயன் கோவிலில்தான் உள்ளன. மேலும் இராஜா ரவிவர்மா மன்னர் பரம்பரையைச் சார்ந்தவர் என்றும், திருவிதாங்கூர் நாட்டை அரசாண்டவர் என்றும், இந்தப் புத்தக ஆசிரியர் புதிதாகக் கண்டுபிடித்துக் கூறுகிறார்! இதுவும் போதாதென்று மகாராஜா ஸ்வாதித் திருநாளையும் சித்திரைத் திருநாளையும் குழப்பிக்கொண்டு, சித்திரைத் திருநாள் என்ற மன்னர் இசைக்கலையில் வல்லவர். அவர் இயற்றிய பாடல்கள் இசை வல்லுநர்களால் பாடப்படுவதை நாடெங்கும் கேட்கிறோம்'' என்கிறார்!

இந்தப் புத்தகம் ஒரு தலைமைத் தமிழ் ஆசிரியையால் எழுதப்பட்டது! இத்தகைய பாட நூல்கள் உருவாவது மிக வேதனைக்குரிய விஷயம்.

கல்படி, கே. ஜி. தம்பி.

(கடைசிக் கடிதம் பரிசு பெறுகிறது)



## அவஸ்தைப்படு!

எனக்கு ஓர் அபூர்வ நெல்லிக்கனி கிடைத்தால் அதை எனக்கு வெறுப்பூட்டும் நபருக்குத்தான் தருவேன். நிறைய ஆண்டுகள் இந்தப் பூமியில் வாழ்ந்து, என் வயிற்றெரிச்சலைக் கொட்டிக் கொண்டதற்காக நன்றாக அவஸ்தைப்படு என்று எண்ணிக் கொள்வேன்!

குமாரி ராதிகா ராஜன், சென்னை.

## தமிழ்த் தொண்டு!

தமிழ்த் தாத்தா உ. வே. சாமிநாத ஐயர் அவர்களுடைய நேர் சீடர் தமிழ்க்கடல் கி.வா. ஜகந்நாதன் அவர்களுக்குக் கொடுப்பேன். பண்பட்ட அந்தத் தமிழ் நெஞ்சம் பன்னெடுங்காலம் தமிழ்த் தொண்டாற்ற வேண்டும் என்ற அவாவில்.

க. இராசாமணி, ஸ்ரீவில்லிப்புத்தூர்.

# நெல்லிக்கனி

## அஸ்திவார பலம்

என் ஆரம்பப்பள்ளி ஆசிரியர் திரு வேதாந்த அய்யங்கார் அவர்களுக்கு எனக்குக் கிட்டும் அபூர்வ நெல்லிக்கனியைத் தந்து மகிழ்வேன். ஏன்? பெரிய பெரிய மேதைகளெல்லாம் கூட ஆரம்பப்பள்ளி ஆசிரியர்களால் உருவாக்கப்படுகிறவர்கள் தானே, அதனால்தான்!

எம். எஸ். சுப்பிரமணியம், மதுரை.

## பூர்வ ஜென்ம புண்ணியம்

என் மாமியாருக்குத்தான் நெல்லிக்கனி! எனக்கு உடல்நலமில்லாத சமயம் பெற்ற அம்மாவைவிட மேலாகக் கவனித்துக் கொண்டார். எந்தக் காரியமானாலும் என்னை



அவர் பெண்ணாகவே கருதி கலந்தாலோசிக்கிறார். அவரை மாமியாராக அடைந்தது என் பூர்வ ஜென்ம புண்ணியம்.

பிரேமா ரவிச்சந்திரன், சென்னை.

## தேவை, நல்ல வேலை

நான் ஒரு வேலையில்லாப் பட்டதாரி. எனவே எனக்கு ஒரு நல்ல வேலை தருபவருக்கே நெல்லிக்கனி! அபூர்வ நெல்லிக்கனி கூடக் கிடைத்துவிடும் போலிருக்கிறது:



வேலை கிடைக்க பாட்டேனென்கிறதே!

சே. சுந்தரேசுவரன், மதுரை.

## வாழ்க, இளம் மேதை!

இளம் வயதிலேயே இசைமேதையாகத் திகழும் மாண்டலின் சீனிவாசனுக்குத் தந்து அவன் ஆயுளும், திறமையும் வளர வாழ்த்துவேன்.

எஸ். கே. வள்ளி, மேட்டூர் அணை.

## அம்பலப்படுத்திய அருண்

அன்னை இந்திராவின் பெயரால் அநியாயமாய் நிதி திரட்டிய அந்துலேயின் அக்கிரமங்களை அம்பலப்படுத்திய அருண்ஷோரிக்கே நெல்லிக்கனி! தொடரட்டும் அவர் நற்பணி!

ஈ. நாகேந்திரன், காரைக்குடி.

## தன்னலமற்ற பணி

அடையாறு புற்றுநோய் மருத்துவமனை



டைரக்டர் டாக்டர் சாந்தா அவர்களுக்கே கொடுப்பேன். —கடந்த 25 ஆண்டுகளாக அவர் செய்துவரும் நற்பணி மேலும் சிறந்தோங்க நெல்லிக்கனி உதவும்.

டாக்டர் வி. ஸ்ரீனிவாசன், சென்னை—33.

## முதற்கடமை

நெல்லிக்கனியை இறைவனுக்கு நிவேதனம் செய்து பிறகு என் ஆச்சாரியார் ஸ்ரீமத் அழகியசிங்கர் அவர்களுக்குத் தருவதையே

என் முதற்கடமையாகக் கருதுவேன். ஸ்ரீரங்கம் கோபுரம் கட்டி முடித்து அதன்பின் வேறு பல திருப்பணிகளும் அவர் மேற்கொள்ள வசதியாக.

ஆர். சுந்தரி, சென்னை—17

**இடதுகை அறியாமல்...**

எனது தலைமை ஆசிரியை திருமதி ருக்மிணி ஆச்சார்யா அவர்களுக்குத் தருவேன். என்னைப் போன்ற ஏழை மாணவிகளுக்கு



அவரது வலது கரம் செய்யும் உதவி இடக் கரம் அறியாதவாறு நடந்து கொள்கிறார்.

துளசி, பூனா.

**புதுமைகள் புரிய...**

சந்தேகமென்ன, சுஜாதாவுக்குத்தான் நெல்லிக்கனி. எழுத்துலகில் இன்று போல் என்றும் புதுமைகளை அவர் செய்து கொண்டிருக்க வேண்டும் என்பதற்காக.

அ. சுந்தரம், சேலம்.

**கடவுளுக்குச் சமமாக...**

கடவுளுக்குச் சமமாக மக்களுக்கு அருள் பாலித்து வரும் பகவான் ஸ்ரீ சத்ய சாயி பாபா அவர்களுக்கு நெல்லிக்கனியை நிவேதனம் செய்வதே சாலச் சிறந்தது.

எஸ். ஜானகி, நாகபுரி.

**வெற்றிமேல் வெற்றி**

டென்னிஸ்ஸில் வெற்றிமேல் வெற்றி



பெற்று நாட்டுக்குப் பெருமை சேர்த்து வரும் ரமேஷ் கிருஷ்ணனுக்கே!

எஸ். சுவாமிநாதன், சென்னை—18.

**படித்தவர், தெளிந்தவர்**

எத்தனையோ நூல்களைப் படித்துத் தெளிவாக, இலக்கிய நோக்கம் சிதையாமல் எடுத்துக்கூறும் ஆற்றல் மிக்க சிலம்பொலி



செல்லப்பன் அவர்களுக்கே அபூர்வ நெல்லிக்கனி!

புலவர் நா. துர்க்கா செல்வம், சென்னை.

**கஷ்டப்பட்டு நஷ்டம் நீக்கி...**

ரொம்ப ரொம்ப நஷ்டத்தில் நடந்து கொண்டிருந்த நெய்வேலி நிலக்கரி நிறுவனத்தில் பொறுப்பேற்று அயரா உழைப்பாலும் நிர்வாக ஆற்றலாலும் புதுமைகளைப் புகுத்தி லாபம் காணுமாறு மேம்படச் செய்த, நல்ல உள்ளம் படைத்த திரு. ஜி. எல். டாண்டன் அவர்களுக்கே நெல்லிக்கனியைத் தருவேன், உறுதி!

பி. கே. செல்வராஜ், நெய்வேலி.

**அவருக்கில்லாமல் வேறு யாருக்கு?**

நாட்டின் பிரதமர் ராஜீவ் காந்திக்கே தரு

## யாருக்கு?

வேன். எழுபது கோடி மக்களைக் காக்கும் பொறுப்பில் உள்ள அவருக்கில்லாது நெல்லிக்கனியை வேறு யாருக்குத் தந்தால் தான் என்ன பயன்?

ஆர். கனகரத்தினம், கருப்பூர்.

**ஏக்கம் தீர...**

என் வீட்டுக்குப் பக்கத்தில் வசிக்கும் எட்டு வயதுச் சிறுவனுக்குப் போலியோ நோய் கண்டதில் இரு கால்களும் பலவீனப்பட்டுப் போயின. மற்ற குழந்தைகள் விளையாடுவதை ஏக்கத்தோடு பார்த்துக் கொண்டிருக்கும் அவனுக்குத் தந்து விடுவேன். அவன் விளையாடக் கண்டு மகிழ்வேன்.

ஸ்ரீமதி கங்கா, திருவனந்தபுரம்.

**நல்ல மனம்**

நான் எஸ். எஸ். எல். ஸி. தேர்வில் மாவட்டத்திலேயே முதல் மார்க் வாங்க ஊக்குவித்த



ஆசிரியரும் பிறகு பி. ஈ. படிப்பில் முதல் வகுப்பில் தேறியதும் ஆறு மாதங்கள் நான் வேலையில்லாமலிருந்த போது எனக்காகப் பல இடங்களுக்கு சிபாரிசுக்காக அலைந்தவரு மான திரு. சம்பூர்ண கணபதி அவர்களிடம் சமர்ப்பிப்பேன்.

ஆர். ராஜேந்திரன், திருச்சி.

## இவரே தகுதியானவர்

கர்நாடக முதல்வர் திரு. ஹெக்டே அவர்கள்தான் நெல்லிக்கனி பெறத் தகுதியானவர். நேர்மை, எளிமை, திறமை ஆகியவை ஆட்சி நடத்தும்போது லஞ்சம், பதவி ஆசை பயமுறுத்தல் போன்ற எந்தத் தீய சக்தியும் அதனைக் கவிழ்க்க இயலவில்லை.

எஸ். ராமசாமி, மகாதேவபுரம்.

## தீர்க சுமங்கலி

எந்தப் பெண்மணியும் சுமங்கலியாக வாழவும் இறக்கவும்தான் பெரிதும் ஆசைப்படுவாள். எனவே நானும் நீண்ட ஆயுளைத் தரக் கூடிய நெல்லிக்கனியை என் கணவருக்குக் கொடுத்து அந்தப் பாக்கியத்தை அடைவேன்.

பரிமளா ஸ்ரீநிவாசன், சென்னை—4.

## அடுத்த தலைமுறையும் ரசிக்கட்டும்

**நெல்லிக்கனி நடிகர் திலகம் சிவாஜிகணேசன் அவர்களுக்கே! இன்றுவரை கண்டுகளித்த**வர்கள் போல் இனிவரும் தலைமுறையும் அவரது சிறந்த நடிப்பாற்றலைப் பார்த்து ரசிக்கட்டும்!

பி. ராஜாராம், வேலூர்.

## தமிழர் உரிமை காக்க

தமிழ் மொழியையும் தமிழர் உரிமைகளையும் பாதுகாத்துத் தரும் ஆற்றல் படைத்த கருணாநிதி அவர்களுக்கே கொடுப்பேன்.

சங்கர், கமுதி.

## இசைக் குயிலுக்கே

நாம் கேட்ட குயிலின் குரலை இனிவரும் தலைமுறையினரும் கேட்டு மகிழ வாய்ப்பாகவும் பொதுப்பணிகள் பல நிறைவேற அறங்கள் தொடரவும் இசைத் திறன் அனைவர் இதயங்களையும் ஈர்க்கவும் வாய்ப்பாகப் பொதுநல நோக்கோடு நெல்லிக்கனியைத் திருமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி அவர்களுக்கே தருவேன்.

ஜி. கல்பனா, ஆகிலி.

## நாம் உய்ய...

அரிய நெல்லிக்கனியைக் காஞ்சி மாமுனிவரிடம் வைத்து நாம் உய்ய அவர் அதை ஏற்றருள வேண்டும் என்று இறைஞ்சுவேன்.

எஸ். கல்யாணி, சென்னை—49.

## தங்கப் பதக்க ஏக்கம் தீர...

டைரக்டர் கே. பாலசந்தர் அவர்களுக்குக் கொடுப்பேன். தமிழ்ப்படம் ஒன்று தங்கப் பதக்கம் பெறும் வரை புதுமையும் புரட்சியும் மிக்க சிறந்த படங்களை உருவாக்கிக் கொண்டேயிருப்பாரில்லையா?

ஆயிஷா ரஜித், தஞ்சை.

## தமிழினக் கப்பலின் தளபதி

புரட்சித் தலைவர் முதல்வர் டாக்டர் எம். ஜி. ஆர். அவர்களுக்கே கொடுப்பேன். அவர் நலம் பெற்று வாழ்ந்தால் தமிழினக் கப்பல் பெரும் புயலிலிருந்து தப்பிக் கரை சேரும்.

அ. தர்மலிங்கம், மாரான் காட்டூர்.



''வக்கீல் ஏன் எப்பவும் கையில் டார்ச் வெச்சிருக்கார்?''

''சட்டம் ஒரு இருட்டறை ஆச்சே!''

—''இளைக்கதிர்.''

## அன்புருவான தொண்டுள்ளம்

உயிர்க் குலம் அனைத்துக்கும் நிகரற்ற வகையில் தொண்டாற்றி வரும் அன்பே உருவான அன்னை தெரசாவுக்கே நெல்லிக்கனி.

திருமதி கீதா, தில்லைஸ்தானம்.

## பிறர் வாழத் தான் வருந்தி...

என்னிடம் அபூர்வ நெல்லிக்கனி கிடைத்தால் அதனை என்னையும் உடன்பிறந்த ஆறு சகோதரிகளையும் வளர்த்து உயர்நிலைக்குக் கொணர்ந்த என் தாயாருக்கே கொடுப்பேன். பலவித வேலைகளைச் செய்து குறைந்த வருவாயில் தன் தேவைகளைக் குறைத்துக் கொண்டு எங்களுக்கு நல் வாழ்வு தந்த தெய்வம் அவள். எங்களுக்காக மட்டுமின்றி கஷ்டப்பட்ட வேறு பல ஏழைக் குழந்தைகளுக்காகவும் வாழ்ந்து உதவினாள்.

திருமதி விஜயா, கிழக்குத் தாம்பரம்.

**ராகமாலிகா வழங்கும் பட்டுப்புடவையைக் குலுக்கல் முறையில் பரிசாகப்பெறும் அதிர்ஷ்டசாலி:**

துளசி,
C/o. கே. வி. வி. சலம்,
304, ஸோம்வார்பேட்,
பூனா—411 011.

வர்த்தமானன் பதிப்பகம் வழங்கும்

# கம்பராமாயணத் தெளிவுரை!

ஒரு பக்கம் மூலம் எதிர்பக்கம் தெளிவுரை! மு. வ. வின் திருக்குறள் தெளிவுரை போன்றது! பதிப்புத்துறையில் புதுமை! விற்பனை முறையில் புதிய வரலாறு!

சலுகை! ஓராயிரம் பேருக்கு மட்டுமே இம்மாபெரும் சலுகை!! இப்போது சலுகை ரூ. 30.00. முழுதும் வரும்போது சலுகை ரூ 120.00.

எப்படி? முதல் 5 காண்டங்கள் 5 தொகுதி; யுத்த காண்டம் 3 தொகுதி. ஆக மொத்தம் 8 தொகுதிகள்! தொகுதி ஒன்று ரூ. 50.00. எட்டுத் தொகுதிகளும் ரூ. 400.00. கழிவு 30 சதவிகிதம் சலுகை ரூ. 120.00 ஆக நீங்கள் எட்டுக்கும் செலுத்தப்போவது. ரூ. 280.00 மட்டுமே! இதுவும் ஒரே நேரத்தில் அல்ல! புத்தகம் வரும் அவ்வப்போது!

**இப்போது பின்கண்ட இரண்டு காண்டங்கள் வந்துள்ளன.**

**பாலகாண்டம் ரூ. 50 – 00**

**சுந்தரகாண்டம் ரூ. 50 – 00**

மூலமும் தெளிவுரையும்

பேராசிரியர் டாக்டர் பூவண்ணன் M.A., PhD.

இந்த இரண்டுக்கும் ரூ. 70.00 M. O. செய்க. ஒன்றானால் ரூ. 35.00 அனுப்புக. உடனே நூல்களை அனுப்புகிறோம். இவற்றை இப்படி வாங்குவோர் எங்கள் சந்தாதாரராகக் கருதப்படுவர். சந்தாவுக்கென தனிக்கட்டணம் எதுவும் இல்லை. இப்படி இவற்றை வாங்குவோர் அனைவரும் சந்தாதாரரே!

இனி வர இருக்கும் மற்றக் காண்டங்களைப் பற்றிய தகவல் கடிதம் மூலம் அவர்களுக்குத் தெரிவிக்கப்படும். முந்திக்கொண்டு M.O. செய்யும் ஆயிரம் பேருக்கு மட்டுமே இந்தச் சலுகை! ஆயிரத்துக்கு மேல் வரும் M.O-க்கள் திருப்பி அனுப்பப்படும். காரணம் ஆயிரம் பிரதிகளே அச்சிட்டுள்ளோம். விற்பனையாளருக்குத் தரும் சலுகையை உங்களுக்கு நேராகத் தருகிறோம். இதன் மூலம் புத்தக விற்பனையில் புதிய சகாப்தம் தொடங்குகிறோம். பதினான்கு ஆண்டுகாலம் கண் துஞ்சாது காகுத்தனை காத்த இலக்குவனைப் போல நாங்களும் வேறு சிந்தனையின்றி இரவு பகல் பாராது ஒரு மாபெரும் வேள்விபோல இந்தப் பணியை மேற்கொண்டுள்ளோம். உங்கள் ஆதரவும் இருக்குமானால் இவ்வேள்வி இனிதே நிறைவேறும்; கம்பராமாயணம் உண்மையாகவே நாட்டில் பரவும். M.O. அனுப்ப வேண்டிய முகவரி: வர்த்தமானன் பதிப்பகம்; 1, மகாலிங்கம் முதல் குறுக்குத் தெரு, மகாலிங்கபுரம், சென்னை - 600034.

---

வேதம் தரும் பயன் வீட்டில் ஹோமம் வளர்த்தல் கல்வி தரும் பயன் நன்னடத்தை. செல்வம் தரும் பயன் தானமும், போகமும். **கிராண்ட் ஸ்வீட்ஸ் & ஸ்நாக்ஸ்** தரும் பயன் நற்சுவை.

**இனிப்பு :** அதிரசம், பாதாம் அல்வா, தூத் அல்வா, கோதுமை அல்வா, சோன்பப்டி, ரஸமலாய், குலாப்ஜாமூன், மங்களூர் போளி, தேங்காய் போளி, ரவாலாடு, ஸொஜ்ஜியப்பம், பொரிவிளங்காய் உருண்டை *முதலியன.*

**காரம் :** தட்டை, தேன்குழல், கைமுறுக்கு, மிக்ஸர், சீடை, வாழைக்காய் வறுவல், உருளைக்கிழங்கு வறுவல், மிளகு வடை, ரிப்பன் பக்கோடா, முள்ளுத் தேன்குழல், காரசேவு, வெஜிடபிள் சமோசா *முதலியன* சாம்பார் பொடி, ரசப் பொடி, இட்லி மிளகாய் பொடி, பருப்புப் பொடி *முதலியன.*

**திருமண விசேஷங்களுக்கு :** சீர் முறுக்கு, அதிரசம், திரட்டுப்பால், பருப்புத் தேங்காய் (பலவகை) *முதலியன தயாரித்துத் தருகிறோம்.*

# தி கிராண்ட் ஸ்வீட்ஸ் அண்டு ஸ்நாக்ஸ்

24, 2வது மெயின் ரோடு, காந்தி நகர், அடையாறு, சென்னை-600 020

போன் : 412557

காமதேனு கூட்டுறவு சிறப்பங்காடி, தேனாம்பேட்டை, சென்னை-18

# ஆகாச கங்கை

பி.வி.ஆர்.



7

கே. ஜி. கே. ஒரு சட்டப்புத்தகத்தில் லயித்துக் கொண்டிருக்கையில் வசுமதி அவருடைய அறையினுள் பிரவேசித்தாள். மௌனமாக அவர் முன் நின்றாள்.

அவளுடைய வரவு அவரை ஆழ்ந்த லயிப்பிலிருந்து கலைத்தது. ஆனால் உடனடியாக ஏறிட்டுப் பார்க்கவில்லை.

"உட்கார்" என்று வலது கையால் சமிக்ஞை செய்தார்.

வசு உட்கார்ந்தாள். கே. ஜி. கே. படிப்பதில் முனைந்தால் எப்போது அதிலிருந்து விடுபடுவார் என்று யாருக்கும் தெரியாது. அவருடைய கிரஹிக்கும் சக்தியைக் கண்டு வியக்கும்போதே, கிரஹித்ததை எளிய முறையில், பல்லே உடைக்கும் சட்ட நூல் வாசகங்கள் இல்லாமல், தெளிவுபடுத்துகையில் பிரமிப்பும் உண்டாகும். வசுமதி அசையாமல் உட்கார்ந்திருந்தாள்.

திடீரென்று அவருடைய குரல் கேட்டது.

"ராத்திரி வண்டி ஏர்போர்ட்டிலேந்து காலியா வந்தது."

"ஸாரி சார்..."

"உன்னே ரிஸீவ் பண்ண யாரோ வந்திருந்தாங்களாம்... நீ அந்தக் கார்லே போனியாம்... டிரைவர் சொன்னான்..."

"வந்து..."

"கோஷ் என்ன சொன்னார்?"

"தம் வீட்டில் விருந்துக்கு அழைச்சார்..."

"நான் கேஸ் விஷயமாகக் கேக்கறேன்."

"ஸ்டே வாங்கிடறேன்னார்..."

"போன அன்னிக்கு என்னாச்சு? அன்னிக்கே ஏன் முயற்சி பண்ணலே?"

"கோஷ் அன்னிக்கு ரெண்டு கோர்ட்லே பிஸியா இருந்தார். சாயங்காலத்துக்கு மேலே தான் சரியாப் பேச முடிஞ்சுது... ராவோடு ராவா எல்லாம் டைப் பண்ணி, கார்த்தாலே நானும் ஒரு தடவை படிச்சுட்டு அப்புறம் கோர்ட்டுக்குப் போனேம்..."

"ஏர்போர்ட்டுக்கு யார் வந்திருந்தா?"

"கோஷ் தம் காரைக் கொடுத்தார்..." என்றாள் வசு.

"நான் மெட்ராஸ் ஏர்போர்ட்டைப் பத்திக் கேக்கறேன்..."

"என்னோட ஒரு ஃப்ரண்ட்..."

"அவனைத் தற்செயலாப் பார்த்தாயா... இல்லே..."

"அவன் இல்லே சார்... ஒரு அவர்..."

"ஓ, ஐ ஸீ... இந்த டிரைவர் சொன்னது தான் சொன்னானே, விவரமாச் சொல்ல மாட்டானோ?"

"சார், இன்னிக்கு ஜஸ்டிஸ் சத்தியதேவ் கோர்ட்லே..."

"இப்ப எனக்கு உங்கிட்டே கொஞ்சம் பேசணும்... மணி ஏழுதானே ஆறது...? பத்து ஜூனியர்ஸ் வர்றதுக்கு முன்னாடி பேசிடறேன்..." என்று கே. ஜி. கே. கூறிவிட்டு, "சீனு!" என்று கத்தினார்.




சீனிவாசன் என்கிற குமாஸ்தா மறுவினாடி வந்தான்.

"சீனு, ஒரு அரை மணி நேரத்துக்கு யாரும் உள்ளே வரப்படாது. போன் வந்தாலும் கொடுக்காதே என்ன...?"

"சரி சார்..."

வசுமதிக்கு ஆச்சரியமாகவும், திகைப்பாகவும் இருந்தது. இந்த மாதிரி ஸீனியர் ஒரு தடவை கூட நடந்து கொண்டதில்லை. அவளிடம் அவர் எதைப் பற்றிப் பேச விரும்புகிறார்? ஒருவேளை ஏதாவது ஒரு வழக்கில் அவள் எழுதிக் கொடுக்க வேண்டியதைச் சரியாக எழுதிக் கொடுக்கவில்லையா?

சீனிவாசன் தலை மறைந்த உடனேயே, "அரவிந்தன் கார் வைச்சுண்டிருக்கான் போலிருக்கு..." என்றார்.

வசுமதி பதில் சொல்லவில்லை. இவருக்கு எப்படித் தெரியும்? திகைத்தாள்.

"நீ அவனோட கொஞ்ச நாளாப் பழகிண்டு வர்றேன்னு கேள்விப்பட்டேன்..."

வசுமதி மௌனமாகவே இருந்தாள். வேறு யாராவது இப்படிச் சொல்லாம் பேசியிருந்தால், நறுக்குத் தெறித்தாற் போல், 'மைண்ட் யுவர் பிஸினஸ்' என்று பல்லை உடைத்துவிட்டு எழுந்து போயிருப்பாள். ஆனால் பேசுகிறவர் கே. ஜி. கே. ஸீனியர் என்கிற அவருடைய ஸ்தானம் கூட அவளைப் பாதிக்கவில்லை. கே. ஜி. கே. ஒரு பெரிய மனிதர். உயர்ந்த மனிதர். ஒரு பக்கம் தனை தாட்சணியம் இல்லாமல், கட்சிக்காரர்களிடம் அநியாயமாக ஃபீஸ் கறந்தாலும், இன்னொரு பக்கம் இரண்டாம் பேர்களுக்குத் தெரியாமல் தான தர்மங்கள் செய்கிறவர். யாரையும் மனம் புண்படப் பேசாத ஒரு நல்ல மனிதர்.

"வசு, நீ அவனை விரும்பறியா? அவனை, அந்த அரவிந்தனைக் கல்யாணம் செய்துக்க ஆசைப்படறியா?"

அவள் தலைகுனிந்து தலை அசைத்தாள்.
"எப்ப?"
"இப்ப சொல்ல முடியாலே, சார்..."
"உன் அக்காக்கள் ரெண்டு பேர் நிக்கிறாளே... சீதாவுக்கு இப்ப வயசு முப்பதாவது இருக்கணுமே... அப்புறம் கற்பகம்.. அவளுக்கு இருபத்தேழுன்னு நெனைக்கிறேன்... அவங்க ரெண்டு பேருக்கும் ஆகாம உன்னால் இவனை..."

அவருக்கு அவளுடைய அப்பா சதாசிவத்தைத் தெரியும். மெட்ராஸ் கஸ்டம்ஸ்லே வேலை பார்த்த அவர் நீண்ட நாட்களாகக் கே. ஜி. கே.யை அறிவார்.

"இது ஒரு ப்ராப்ளம்தான் சார்..."

"என்னாலே உங்க வீட்டு ப்ராப்ளத்தை ஸால்வ் பண்ண முடியாதுதான், வசு! ஆனா உன்கிட்டே ஒரு உண்மையை நான் இப்பச் சொல்ல வேண்டியிருக்கு... இதனாலே உனக்கு ஒரு பாதிப்பு, பெரிய பாதிப்பு ஏற்படலாம்... மனசிலே தெம்பு இருக்கா?"

திடீரென்று வசுமதி தன்னுக்குள் பயந்தாள். என்ன இப்படி ஒரு அதிர்ச்சி!

"சொல்லுங்க சார்...

"நீ என்னோட ஏழு ஜூனியர்களிலே கடைசி ஜூனியர்... ஆனா புத்திக் கூர்மை, சட்ட ஞானம்னு வர்றப்ப நீதான் ஃபர்ஸ்ட்... சில சமயங்களிலே நான் எனக்குள்ளேயே எண்ணி மகிழ்ந்துப்பேன்... கேரளாவிலே ஒரு அன்னா சாண்டி. ஃபர்ஸ்ட் லேடி ஹைகோர்ட் ஜட்ஜ். மெட்ராஸ் ஹைகோர்ட்லே நீ ஃபர்ஸ்ட் லேடி ஜட்ஜா ஒரு நாள் வருவேன்னு எனக்குத் தோணும்...

வசுமதி நெகிழ்ந்து போனாள்.

கே. ஜி. கே. தொடர்ந்தார்.

"நீ கலியாணம் பண்ணிக் கொண்டுதான் ஆகவேண்டும்... பண்ணிக்கலேன்னாதான் தப்பு... ஆனா அதே சமயத்தில் உன் எதிர்காலத்தையும் நெனைச்சுப் பார்... அதோட அந்த அரவிந்தனைப் பற்றியும் எண்ணிப் பார்..."

"புரியலே சார்..."

"அரவிந்தன் ஒரு என்ஜினியர். அவனோட அப்பாவும், கம்பெனி சேர்மன் தாரக்ராம்னு பேர் — அவரும் பழைய குடும்ப ஃப்ரண்ட்ஸ்.. தாரக்ராம் தம் ஒரே பெண்ணை அரவிந்தனுக்குத்தான் கொடுப்பதுன்னு ஒரு பெரிய முடிவுக்கு வந்திருக்கிறார்..."

"இட் இஸ் எ நியூஸ் டு மீ சார்."

"ஆனா சேர்மன் தாரக்ராம் வெறும் சிநேகிதத்துக்காக இப்படி ஒரு முடிவு எடுத்திருக்கிறார்னு நான் சொல்லமாட்டேன்... அரவிந்தனைத் தவிர வேறே யாராலும் அவரோட பெண்ணை அரவணைச்சுக் கொண்டு போக முடியாதாம்... இதை அவர் உறுதியா நம்பறார்...

"தாரக்ராமோட பெண்ணுக்கு ஏதோ ஒரு காம்ப்ளக்ஸ் போல இருக்கு. மனம் பலவீனமா இருக்கு... முழுசா, அனீமியா இல்லே கொட்ட காத்தா இல்லே மென்ட்டலி ரிடார்டட்டா எதுவும் எனக்குத் தெரியாது... என் அவ பேர் கூடத் தெரியாது... தாரக்ராம் நம்பறார், தம் பெண் எல்லாப் பெண்களையும் போல ஆயிடுவாள், அரவிந்தனைக் கலியாணம் பண்ணிக் கொண்டான்னு."



பாடகர்: "கடைசிவரை இருந்து என் கச்சேரியைக் கேட்டேள். ரொம்ப சந்தோஷம்..."
பெரிய மனிதர்: "ஹி... ஹி. கொஞ்சம் கண் அசந்துட்டேன்."
—கிளை. அ. கதிர்வேல்.

"நான் வழிவிட்டு விலகி நிற்கணும்னு சொல்றேள்...!"

"நோ... டெஃபனட்லி நாட். அப்படிச் சொல்ல நான் யார்? எனக்கு என்ன யோக்கியதை, அருகதை இருக்கு?"

"பின் எப்படி சார் இவ்வளவு தூரம் பேசினேள்?"

கே. ஜி. கே. சிரித்தார்.

"என்னையே மடக்கறியா? குட். மூந்தா நாள் தாரக்ராம் வந்திருந்தார். அழாத கோஷமாப் பேசினார்... ஆனா நான் எதையும் பிராமிஸ் பண்ணலே. மல்டி மில்லியனர்... கம்பெனி ஒருநாள் பெண்ணுக்கும், மாப்பிள்ளைக்கும் போய்ச் சேரும்... அரவிந்தன் கம்பெனி சேர்மனாகிவிடுவான்..."

"கதை புரிஞ்சுட்டுது சார்."

திடீரென்று கே. ஜி. கே. திசை மாறிப் பேசினார்.

"நான் இந்தக் காதல், தெய்வீகக் காதல், லவ் இதுபத்தியெல்லாம் சில சமயம் தீவிரமா சிந்திக்கப் பார்ப்பேன்... ஏன்னா என் பெண்ணே லவ் மாரேஜ் பண்ணிண்டவள். இந்த லவ்ங்கற வார்த்தை இந்த நாள்லே ரொம்ப சீப்பாப் போயிடுத்து. ஆனா அதனோட ஆழம், வலிமை எல்லாம் லட்சத்திலே ஒண்ணு, கோடியிலே ஒண்ணுன்னு இருக்கத்தான் இருக்கு... எனக்கு என்ன தோணறது தெரியுமா...?"

"என்ன சார்...?"

"காதல் காதலாகவே இருக்கணும்... அது கலியாணம் என்கிற க்வர்லே போய் முட்டிக்கப்படாது... இன்னும் ஒண்ணு... பரஸ்பர அன்பு அதிகமாப் போறபோது, அதிலே காதலும் இல்லாமப் போயிடறது... ஃபார் எக்ஸாம்பிள், காதலிக்கிற ஒரு பெண் இன்னொரு இடத்திலே வாழ்க்கைப்பட நேர்றப்ப, காதலன் மாய்ந்து போகப் படாது... அவளைப் பழிவாங்க எண்ணப்படாது... மாறா, அவ எங்க இருந்தாலும் நன்னாயிருக்கணும்னு வாழ்த்தணும்... இதுதான் தெய்வீகமான காதலுக்கு லட்சணம்..."

வசுமதி எழுந்தாள்... காதலைப் பற்றி யார் தான் பேசுவது என்ற நியதியோ கிடையாதா?

''நான் இன்னும் இன்னிக்கு கேஸ் லிஸ்ட் பார்க்கலே வசு. எந்தக் கேஸெல்லாம் இன்னிக்கு வர்றதுன்னு பார்க்கணும். அதை அனுப்பு. அப்புறம், சேஷாத்ரி வந்ததும், என்னைப் பார்க்கச் சொல்லு... நாளைக்கு மதுரையிலே ஒரு இன்கம்டாக்ஸ் கேஸ் இருக்கு... அவனை அனுப்பணும்...''

''யெஸ் சார்...''

வசுமதி மெதுவாக நடந்து வெளியேறினாள்.

* * * * *

அன்று இரவு வசுவும், அரவிந்தனும் ஓட்டல் காஞ்சியில் டவர் ரெஸ்டாரெண்டில் விருந்து சாப்பிடுவதாக ஏற்பாடு. முந்திய இரவு ஏர்போர்ட்டிலிருந்து திரும்பும் போதே நிர்மானித்துக் கொண்டார்கள். மாலை நான்கு மணிக்கு வை ஹ கோர்ட்டிலிருந்து போன் செய்து ஏற்பாட்டை ரத்து செய்தாள். மறுநாள் அவனுடைய வீட்டுக்கு மறுநாள் மாலை வரப் போவதாகத் தெரிவித்தாள். அரவிந்தனுக்கு ஒன்றும் புரியவில்லை. வசுமதியின் பேச்சு தோரணையோ புதிதாக இருந்தது.

மறுநாள்...

வெள்ளிக்கிழமை.

வசு வந்தாள்.

இருவரும் ட்ராயிங் ரூமில் உட்கார்ந்த உடனேயே வசு நேரடியாக விஷயத்துக்கு வந்தாள்.

''அரவிந்த்... ஒரு முக்கிய சமாச்சாரம்...''

''அது என்னவாயிருக்கும்னு நான் நேத்திலிருந்து என் மண்டையைப் போட்டு உடைச்சுண்டிருக்கேன்...''

''நீங்களும் நானும் பிளான் பண்ணினதெல்லாம் வேஸ்ட்...''

''என்ன சொல்றே வசு?''

''நாம ஃப்ரெண்ட்ஸா, குட் ஃப்ரெண்ட்ஸா கண்டின்யூ பண்ணுவோம். அர்விந்த்... நாம மனசார நேசிச்சாலும், வாழ்க்கைன்னு வர்றப்ப ரசிக்கும்படியா இருக்காதுன்னு தோணுகிறது.''

அரவிந்தனை அதிர்ச்சி தாக்கியது.

''என்ன, என்ன சொல்றே, வசு... இது என் வாழ்க்கையிலே இப்ப திடீர்னு ஒரு குழப்பம் வந்திருக்கு... அதேசமயம் நீயும் இப்ப என்கிட்டே மனம் மாறிப் பேசறே... நேத்து ராத்திரி நாம காஞ்சியிலே சாப்பிடலாம்னு முந்தாநாள் சொன்னவளே நீதான்... ஆறு நாலு மணிக்கு அதைக் கான்சல் பண்ணியிருக்கே... தட் மீன்ஸ் அந்த நேரத்துக்கு முன்னாலே ஏதோ பயங்கரமா நடந்திருக்கு...''

''உங்க மேலே எனக்கு வெறும் அன்பும் நேசமும் மட்டுமில்லே, அர்விந்த்... மதிப்பு, அபிமானம், மரியாதை, ஏன் ஒருவித பக்தி கூட இருக்கு... நான் இதையெல்லாம் கடைசி வரை காப்பாத்திக்கணும்னா, நாம வாழ்க்கையிலே ஒண்ணு சேரக் கூடாது...''

''நீ எதையோ மனசிலே வைச்சுண்டு இப்படி எல்லாம் பேசறே; வசு... வார்த்தை ஜாலத்தாலே அடிப்படை உண்மையை மூடி மறைக்கிறே...''

''அர்விந்த்!''

''உம்...''

''உங்களைக் கலியாணம் செய்துக்கறதில்லைன்னு நான் முடிவு எடுத்திட்டேன்... அது தான் சரியான, சிறந்த முடிவுன்னும் எனக்குப் படறது... அதனாலே நீங்க வேறே பெண்ணைப் பார்த்துக் கலியாணம் செய்து கொள்ளலாம்...''

''அரவிந்தன் ஆடிப் போனான். வசுமதி என்ன சொல்லுகிறாள்? இல்லை, அவள் எதுவும் சொல்லவில்லை! அவளை யாரோ இதையெல்லாம் சொல்ல வைத்திருக்கிறார்கள். யார்? அப்பாவா? பாதிநாள் ஒத்தைத் தலைவலியில் இருக்கிறவர், அவளைக் கண்டால் ஆரவாரத்துடன் பேசுகிறவர் நிச்சயமாகப் பெண்ணை இப்படி மாற்றியிருக்க மாட்டார்.

பின் வேறு யார்?

ஸீனியர் கே. ஜி. கே. யாக இருக்க முடியுமா?

அவருக்கும் அவர்களுடைய காதலுக்கும் என்ன சம்பந்தம்?

யார் இதில் சம்பந்தப்பட்டிருப்பார்கள்?

எங்கோ ஓடி மறைந்திருந்த தாரக்ராம் கண்ணெதிரே வந்தார்!

ஒருவேளை அவரோ?

அவரும், இவளும் ஒரே நாள் ஒரே விமானத்தில் டெல்லிக்குப் பிரயாணம் செய்திருக்கிறார்களே?

தாரக்ராம் அவனுடைய வாழ்க்கையில் இப்போது தலையை நீட்டுகிறார். அதேபோல வசுமதியின் வாழ்க்கையிலும் குறுக்கிடுகிறாரா?

அவனுக்குப் புரிந்தது.

தாரக்ராம் தம் பணபலத்தால் வசுமதியைத் தாக்கி இருக்கிறார்!

(தொடரும்)

கணவன்: ''ஏன் சொல்லாமல் சினிமாவுக்குப் போனே?''

மனைவி: ''நீங்கதானே 'இப்போ வர்ற சினிமாவெல்லாம் ஒண்ணும் சொல்லிக்கிறாப் போலே இல்லே'ன்னு நேற்றைக்குச் சொன்னீங்க?''

—சாருபாலா கண்ணன்.





"எனது ஆறு வயதுச்
செல்வி பரத
நாட்டியம் நன்கு
ஆடுகிறாள்.
நாளைய உலகமே
அவளது மேடையாம்."

# போர்ன்விடாவின் இனிமைக் காலம்

போர்ன்விடா அளித்தவரை பாச மனங்கள்
நேசத்தோடு நினைத்து மகிழும் தருணங்கள்!

வளரும் குழந்தைகள் வேறு எந்த மால்ட்டட் பானங்களையும்விட போர்ன்விடாவை விரும்புவதேன்? போர்ன்விடா அருந்தி வளர்ந்த இரு தலைமுறையினர் தங்களுடைய குழந்தைகளுக்கு போர்ன்விடா தவிர வேறு எதுவும் உகந்ததல்ல என்று வலியுறுத்திக் கூறுவதேன்?

அதில்... உற்சாகம் துள்ளும் சுவை மட்டுமல்ல, காட்பரியின் பிரபல பெயர் மட்டுமல்ல, அவற்றைவிட அதிகமோ அதிகம். அதுதான் போர்ன்விடா! அதோடு வளருங்கள்.

காட்பரிஸ்
## போர்ன்விடா
நல்ல வளர்ச்சி,
போர்ன்விடா பயிற்சி.




OBM/3783 TAM

# 19

## மெள்ள எழுந்தது காதல்

வர்மன் ஓலை நறுக்கைப் பிரிக்க, முத்தான எழுத்தாணி முத்துக்கள் நன்னே சிதறிக் கிடந்தன.

வீரரே,

தங்களுக்கு செஞ்சுகா தெண்டன் சமர்ப்பித்த விஞ்ஞாபனம்.

தாங்கள் வாள் சுழற்றியதை முன்னமேயே பார்த்தவள் நான். அரண்மனை முன்னால் அந்த வெள்ளையனை என்ன தவிக்க வைத்தீர்கள்?

திரும்பவும் இன்று என் கூடாரம் முன்பே பார்த்துவிட்டேன்.

எனக்கு வந்த பகைவனை என்ன தீரமாகச் சுழற்றி அடித்தீர்கள்?

கையே சக்ராயுதமாக மாறியதே!

அனைத்துத் தேகத்தையும், முகவிலாசத்தையும் பார்த்தபோது, பையத்துயின்ற பரந்தாமனே வந்து யுத்தம் செய்தது போல இருந்ததே!

இந்த அபலைபொருட்டுத் தாங்கள் இவ்வளவு சிரமம் எடுக்க வேண்டுமோ?

ஏதோ ஒரு சிறு ஜமீனின் சின்ன இளவரசி இவள் என்று வாளாவிராமல் அன்றிலிருந்தே என் பங்கில் இருந்து வருகிறீர், பார்த்து வருகிறேன்.

அப்படிப் பார்த்து வந்ததில்தான் என் மனத்தில் என்னையறியாத ரகசிய முளை ஒன்று கிளர்ந்திருக்கிறது.

அது எப்படிப் பரிணாமமாகி வந்தது என்பதும் தெரியாது.

ஆனால் பரிசலில் கிராமத்தில் ஒதுங்கிய பிறகு நான் சொன்ன வாதங்களைப் பொறுமையாகக் கேட்டுக்கொண்டு, மறுமொழியின்றி நிசப்தமாய் நீங்கள் போனீர்களே.

அப்போதுதான் முதல்முறை காற்று சிலம்பி என் இதயத்தின் திரையைத் திறந்தது.

நன்னே கிளையும், பூவும், போட்டுமாய் என் ரகசிய வளர்ச்சியை அப்போதுதான் கண்டேன்.

வீரரே, இதுவரை குயில் கூவியதில் நான் எந்த ருசியும் கண்டேனில்லை.

ஆனால் இன்று பாலாறு ஓடும் கரையின் மாமரங்களிலிருந்து துளும்பிய குயில் கூவல்கள் ஏன் எனக்குக் கற்கண்டாய் இனிக்கின்றன.

தோப்புகளின் இளம் தளிர்களையும், மென் மலர்களையும் தழுவி வரும் இந்தத் தென்றல் இதுவரை எனக்கு இதம் தந்ததில்லை.

ஆனால் இன்று ஏன் அது மிருதுவான சுகமாய் என் மெல்லிய மேனி எங்கும் அபிஷேகிக்கிறது?





நேற்று வரை வெறும் நீரும், நிலமுமாய்த் தெரிந்த இந்த ஆறும் புல்வெளியும் ஏன் இன்று எனக்கு ஓடும் கனவாகவும், அதற்கு அமைந்த கற்பனைக் கரையாகவும் தோன்றுகிறது.

வீரரே!

என் சிந்தையை நான் அடக்க முடியவில்லை. எழுந்தால் தோன்றுகிறீர் நீர்! விழித்தால் தோன்றுகிறீர், நீர்!

என் ஒவ்வொரு நினைவின் முன்னும் பின்னும் இடையுமாய்த் தோன்றுகிறீர் நீர்!

ஆச்சரியம்.

நேற்று நான் உறங்கவில்லை.

விழிகள் ஏனோ விழித்திருக்கின்றன.

நினைவின் மென் சுருதி ஏதோ ராகத்தின் வருகைக்குக் காத்திருக்கிறது.

சுவாசம் மெல்லியதாய் சீறல் போட நிசப்த ரூபமாக நான் யாருக்கோ காத்திருக்கிறேன்.

கண்களில் இமைகள் சோகமாய் அழுந்துகின்றன.

விழியில் ஒரு பளிங்குத் திவலை ஏனோ நிரந்தரமாய் நடுங்கிக் கொண்டிருக்கிறது.

இழுத்த தந்தி போல் நடுநடுங்கும் இதயத்துடன், நான் ஆவல் மயமாய், வேட்கை மயமாய், தாப மயமாய்க் காத்திருக்கிறேன்.

இவ்விதம் எப்படி மாறினேன் நான்?

இந்த நுண் உணர்வுகள் என்னிடம் எவ்விதம் குடிபுகுந்தன!

வீரரே, நான் விம்மிதத்தோடு யோசித்துப் பார்க்கிறேன்.

அப்போதுதான் ஒன்று புரிகிறது.

அதை மனம் திறந்து கூறுகிறேன்.

எங்கள் அரண்மனையில் தாங்கள் என்று பாதம் வைத்தீரோ, அன்றே என் மனத்தில் புது நடுகைக்கு விதை விழுந்துவிட்டது.

அந்த விதை முளைத்து மூவிலை விட்டுப் பூத்து, காய்த்து, இன்று மணத்து நிற்கிறதென்றால்—

அதன் காரணம் எல்லாம் தாங்கள்தான் வீரரே! தாங்களேதான்!

இதை என் மானம் தவிர்த்து, வெட்கம் விலக்கி, வெகுளி போல விண்டுரைத்துவிட்டேன் நான்.

இனி எனக்குச் சுமையில்லை.

நான் பறக்கிறேன், வீரரே, நான் பறக்கிறேன்!

"பாலாழி நீ கிடக்கும் பண்பை
யாம் கேட்டேயும்,
கால் ஆழும்; நெஞ்சழியும்; கண்
சுழலும்..."

வீரரே, நான் இதைச் சொல்லவில்லை, நம்மாழ்வாரே கூறியிருக்கிறார். வருகிறேன்.

அனந்த கோடி நமஸ்காரமிட்ட,

அடியாள்.

படித்து முடித்தான் அவன். கண்களிலிருந்து முத்துக்கள் உதிர்ந்தன. உதடுகள் மென் நடுக்கமிட்டன.

மெதுவாக மடக்கித் தனது அங்கிப் பைக்குள் பூப்போல வைத்தான்.

நிமிர்ந்து பார்த்தபோது அந்தப் பணிப் பெண் கண்களில் நீர் வார்த்திருந்தது.

திடுக்கிட்டான் அவன்.

"என்ன இது?" என்றான்.

"இல்லை ஹுஜூர்! வாழ்க்கையில் நேர்



ஸ்ரீவேணுகோபாலன்

எதிரே பிரேமையைப் பார்க்கும் போது என் மனம் தளும்பி நிற்கிறது!''

இமை ஓரம் துணுக்காக நின்ற திவலை உருண்டு கீழே உதிர்ந்தது.

வர்மன் அவளை அதிசயத்துடன் பார்த்தான்.

"இந்தப் பெண்ணே! நீ கூட அந்த நோயில் அகப்பட்டிருந்தாயா?'' என்றான் தணிந்த குரலில்.

"இல்லை பிரபு, எனக்கு அந்தப் பாக்யம் கிடையாது.''

அவள் குரல் தழுதழுத்தது.

"ஏன்? என்ன காரணம்?''

"நான் பணிப்பெண்! அந்தப்புரத்துத் தாதி! என்னை விருப்பப்பட்டவருக்கு எல்லாம் என் அன்பைக் கொடுக்க வேண்டும். என் மனத்தை நான் தானாக யார் மீதும் படர விடக் கூடாது'' என்றாள் அவள் மெல்லிய இழையாக. ஒரு நாடியில் சோகம் தொனித்தது.

"ஆனால் ஹுஜூர்! சபையில் யார் பாடினாலும் காதல்! யார் ஆடினாலும் காதல்! அதைக் கேட்டுக் கேட்டு இப்படியும் மனம் பரவசமாகிறது. எனக்கு அது கிடைக்காவிட்டாலும் பிறருக்கு அது கிடைப்பதைப் பார்க்கும்போது மனம் பேரானந்தம் அடைகிறது! நான் வருகிறேன் பிரபு நீடூழி வாழுங்கள்..''

அவள் புறப்பட்டாள்! "இருங்கள்!'' என்றான் அவன். தன் பையைச் சோதித்து ஒரு வெள்ளி நாணயத்தை எடுத்து அவளிடம் அளித்தான்.

கண்களில் அதை மாறி மாறி ஒற்றிக் கொண்டு நடந்து போனாள் அவள்.

வர்மன் குதிரை ஏறினான். பிறிதும் கண்ணீர்த்துளிகள் சாகங்கு மழைத் திவலைகள் போல் உதிர்ந்தன.

அங்கங்கு இளைப்பாற நிற்கும்போதெல்லாம் அங்கியிலிருந்து ஓலையை எடுத்து மீண்டும் படித்தான். மனம் பல இடங்களில் விம்மியது. தன்னையும் ஒருத்தி நினைத்தாளா என்று நினைத்தான். அந்த நினைப்பிலேயே கண் பிழிந்து மழை வழிந்தது.

மனத்தில் செஞ்சுகாவைப் பார்க்க வேண்டும் என்று பெரிய ஆத்திரம் துரத்தினாலும், இரண்டாம் நாள்தான் திருச்சிராப்பள்ளியை அணுக முடிந்தது.

காரணம் வழியில் எங்கேயாவது 'செஞ்சுகா கோஷ்டியார்'' தண்டு இறங்கியிருப்பார்களா என்று கவனித்து வந்தான்.

திருச்சிராப்பள்ளிக்கு வெளியே சந்தா சாகிப் படைகள் எங்கே தங்கியிருக்கின்றன என்று கேள்விப்பட்டுக் காவிரியின் கிழக்கு முகத்தை நோக்கிச் சென்றான்.

தக்க தருணத்தில் தண்டுள் நுழைந்து செஞ்சுகாவைத் தேட வேண்டுமென்று யோசனை! அதற்காகக் காத்திருந்தான்.

அப்போதுதான் திருச்சிராப்பள்ளி மலைக் கோட்டைக் கோவில் அவன் பார்வையில் விழ,

மனம் பரவசமாகியது.

தாயுமானவப் பெருமானை நினைத்தான்.

"சுவாமி! தங்கள் இருப்பிடம் இன்னும் இந்தக் குழப்பத்து இடமாக வேண்டுமா? நல்ல வழியில் இதைத் தீர்த்து, நாட்டில் தர்மத்தை நிலை நிறுத்தக் கூடாதா?'' என்று பிரார்த்தித்

## அருள்வாக்கு

மந்த்ர சப்தங்களுக்கு எப்படிக் கண்டமாயிருந்து கொண்டே அகண்டத்தில் சேர்க்கிற சக்தியிருக்கிறதோ, அப்படியே ஸங்கீத சப்தங்களுக்கும் (சக்தி) இருக்கிறது. ஸ்வர ஸ்தானம் ஒன்றைத் தீர்க்கமாக (கார்வையாக) ச்ருதி சேர நீட்டியோ அல்லது கமகமாக நன்றாக இழைத்தோ மூர்ச்சனையின் உச்ச நிலையை ஸ்வச்சமாகத் தொட்டுவிடுகிற போது கண்டமே அகண்டானுபவத்தில் சேர்ந்து விடுகிறது.



இந்த அகண்டானுபவம்தான் அத்தனை வேத, வேதாந்த, யோக, மந்திர, தந்திர சாஸ்திரங்களுக்கும் லக்ஷ்யமாயிருப்பது. இதை ஸாதித்துத் தரும் ஸ்தானத்தில்தான் ஓசையை, ஒலியை நாதப் பிரும்மம் சப்தப்ரும்மம் என்று ஸாக்ஷாத் பரமாத்மாவாகச் சொல்வது. அதை goal—ஆக நினைத்து அதாவது காது என்ற இந்திரியத்தின் மூலம் மனஸின் இந்திரிய ஸௌகத்துக்காக இன்றி ஆத்ம சௌக்யத்தை goal ஆகக் கருதி ஸங்கீத அப்பியாசம் பண்ணும் போது அது "நாதோபாசனை" "நாத யோகம்" என்ற உசந்த பெயரைப் பெறுகிறது.

அர்த்தத்தோடு, அக்ஷரத்தோடு கலந்து மனமுருகிப் பாடும் போது பாடுகிறவருக்கும் கேட்கிற ஸதஸ் முழுவதற்கும் பரமாத்மாவிடம் தோய்ந்து நிற்கிற பெரியதான இன்பம் கிட்டுகிறது.

**—ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்.**

தான்.

சந்தாசாகிப் படைகள் காவிரியின் ஓரம் வந்துவிட்டது அவனுக்கு ஆச்சரியமாக இருந்தது.

கோட்டையைச் சுற்றி அல்லவா அவை இருக்க வேண்டும்!

ஏன் இங்கே இருக்கின்றன?

அதேநேரம், இவரது படைகள் இவ்வளவு தள்ளி இருக்கும் போது கோட்டையுள் இருப்பவர்கள் ஏன் கோட்டையைத் திறந்து வெளி வரக்கூடாது?

சந்தாசாகிப்பின் தண்டை அணுகுவதே சிரமமாக இருந்தது.

நெருங்கினால் அம்புகள் வந்து விழுந்தன

படை வீரர்கள் கண்கொத்திப் பாம்பாக இருந்தார்கள்.

இதற்கு யுக்தி என்ன செய்வது?

வெள்ளைக் கொடி தூக்கிப் போனால் ஏதோ, என்னவோ என்று அவனைத் தண்டுக்குள் அனுமதித்தாலும் அனுமதிப்பார்கள்.

அப்படிச் செய்யலாமா?

தன் பையிலிருந்து வெள்ளை வேட்டியைக் கிழித்துக் கொடியாக மாற்றி அவன் அன்று காலை புறப்பட—

ஏதோ குரல் அவனை அழைப்பது போலிருந்தது.

திடுக்கிட்டுத் திரும்பிப் பார்த்தான்.

ஆச்சரியத்தில் அவன் கண்கள் மலர்ந்தன.

வருவது யார்?

அந்த விழிகளை அவன் மனத்துள் பிம்பம் செய்தவளாயிற்றே!

அந்த முறுவலை இதயத்தில் செதுக்கிவிட்டவள் ஆயிற்றே!

"அவள்தானே அவனது முதல் கனவுகளைத் திறந்துவிட்டவள்!

இப்போதும் அவளைப் பார்த்தவுடன் மனம் எப்படிப் பரவசம் கொள்கிறது.

"வீரரே!" என்றாள் அவள். "நல்ல சமயத்தில் இங்கே கிடைத்தீர்கள்! தாங்கள் என்ன செய்யவிருக்கிறீர்கள்?" என்று கேட்டாள்.

"அம்மணி! செஞ்சுகா இப்போது சந்தாசாகிப் படையோடு இருந்து வருகிறாள். அதைக் கண்டுபிடிக்கவே போகிறேன்" என்றான் அவன்.

"நில்லுங்கள் வீரரே, நில்லுங்கள்! அங்கே போகாதீர்கள். சந்தாசாகிப்பின் யோகம் இப்போது மாறிவிட்டது!" என்றாள் சிந்து.

"அப்படியா!" என்று திடுக்கிட்டுக் கேட்டான் வர்மன்.

"ஆமாம்! இப்போது எதிராளி கை வலுவாகி வருகிறது. இந்தச் சமயம் நவாபிடம் போய் மாட்டிக் கொள்ளாதீர்கள்."

வர்மனுக்கு அந்த வார்த்தைகள் பிடிக்கவில்லை. அப்படியானால் அவன் செஞ்சுகா அந்தப் படையோடு அப்படியே கிடப்பதா?

"அம்மணி! எனக்குக் குழப்பமாக இருக்கிறது! என்ன செய்வது என்று தெரியாமல் திகைக்கிறேன்!" என்றான் அவன்.

"வீரரே! நிச்சயமாய் நீர் அந்தப் படைத் தண்டுக்குள் போக முடியாது!" என்றாள் அவள்.

"ஏன்?" என்றான் அவன்.

(தொடரும்)

# அப்பம் கேட்ட மகன்

துப்புரவுத் தொழிலாளி விநாயகத்துக்கு 18, 19-ம் வார்டு என்றால் கொள்ளை ஆசை. அந்தத் தெருக்களில் வாழும் மனிதர்கள் மிக நல்லவர்களாக இருக்கிறார்கள். இவனது வேலை என்னவோ சாக்கடையைச் சுத்தப்படுத்துவதுதான் – மண்வாரி, அடைத்துக்கொண்டிருக்கும் சக்கை சகதிகளை நீக்கி நீர் தேங்காமல் பார்த்துக் கொள்வது: விநாயகம் தன், நீண்ட கொம்பின் கீழ் பொருத்தப்பட்டிருக்கும் தகட்டினால் சாக்கடையைச் சுத்தப்படுத்துவது தினமும் தவறாமல் நடப்பதுதான். அவன் மட்டும் முன்னால் வந்து சக்கை சகதிகளை வாரிப் போட்டுக் கொண்டே போவான். பின்னால் மெதுவாக மாணிக்கம் வண்டி ஓட்டி வருவான். மாடும் மெல்ல அசைந்து வரும். கூடவே வரும் காசியும், சின்னப்பொண்ணுவும் கும்பலாகக் குவிந்து கிடக்கும் குப்பைகளையும், சக்கை சகதிகளையும் வாரி வண்டியில் போட்டுக் கொண்டே வருவார்கள். இப்படிப் பொடி நடையாய் மெல்ல நடந்தபடி ஊரைச் சுற்றிக் கொண்டு தன் பணியைச் செவ்வனே செய்வதில் அவன் மகிழ்ந்தான்.

யோகம்; செய்கையில் திறமை என்கிறது கீதை. தொழிலை முழுமையாகச் செய்துவிட்டாலும், சிறு பாராட்டுகூட கிடைக்காமல் போனால் மனசு நொடிகிறது. இப்படிப்பட்ட சிறு பாராட்டுதல்களைத் தாம் வேலை செய்த காலங்களில் கண்டறியாத, எதிர்பார்த்து ஏங்கிய, இப்போது ஓய்வுபெற்றுத் தெருவை வெறித்துப் பார்த்துக் கொண்டிருக்கும் இவர்கள்- 18, 19-ம் வார்டுவாசிகள்- விநாயகத்தைப் பாராட்டுகிறார்கள். அது பொய்யல்ல. வெறுமனே தெருச் சாக்கடை சுத்தமாக வேண்டும் என்று ஒப்புக்குச் சொல்லுகிற வார்த்தையும் இல்லை. அவன் செய்யும் வேலையின் சுத்தத்தைப் பார்த்துத்தான் சொன்னார்கள். இந்தத் தெருக்களில் வசிப்பவர்கள் பெரும் படிப்பாளிகள் என்பதால் அவர்கள் வாயால் புகழ் பெறுவதை, பாராட்டுப் பெறுவதை விநாயகம் விரும்பினான்.

அது என்னவோ சொல்லி வைத்தது போல ஒவ்வொரு வீட்டிலும் ஒரு பெரியவர் —ஓய்வு பெற்ற உயர் அதிகாரி. அந்தக் கடைசித் தெருக்களுக்கு வரும்போது காலை மணி பதினொன்றுக்குமேல் ஆகிவிடும். எல்லோரும் வேலைக்குப் போய்விட, இந்தப் பெரியவர்கள்தான் வாசலைப் பார்த்தாற் போலச் சாய்வுநாற்காலியைப் போட்டுக் கொண்டு அன்று வந்த கடிதத்தை (எப்படித்தான் தினமும் வருகிறதோ!) திரும்பத் திரும்பப் படித்துக் கொண்டிருப்பார்கள், சிலர் பேப்பர் படிப்பார்கள். இவை ஏதுமில்லாமல் வெளியில் நின்று எட்டிப்பார்த்தால் அவர்களோடு இரண்டொரு வார்த்தை பேசிவிடுவது விநாயகத்தின் வழக்கம்.

சாதாரணமாக வேலை அதிகமிராது. மழை காற்று இவை பலப்பட்டால்தான் அவனுக்கு அலுப்புத் தட்டும்படி வேலை உண்டாகும்.

வேலை மிகும் என்பதால், மழை, காற்று இதனை அவன் பழித்ததில்லை. மாறாக



வாழ்த்தினான். பலமாக நேசித்தான். சுத்தப் படுத்தும்போது, ''நல்ல மழை... பாருங்களேன்... என்ன அமர்க்களம் பண்ணியிருக்குது...'' என்று சொல்லிக்கொண்டே வேலை செய்வான். இதைக் கேட்க யாராவது பக்கத்தில் இருக்க வேண்டிய கட்டாயம் ஏதுமில்லை.

இன்றும் வழக்கம்போல வந்தான். கடைசி வீடுகளில் இவன் வருவதைப் பார்த்துப் பெண்கள் வெளியே வந்தார்கள். இவன் அருகில் போனதும் 'குழாய்த் தண்ணி குட்டையாத் தேங்குது. என்னன்னு பாருப்பா' என்றார்கள்.

தன் கையிலிருந்த கொம்பைச் சாய்த்து நிறுத்திவிட்டுக் குழாயடியை நோட்டம் விட்டான். இந்தக் குழாயை இந்த இடத்தில்தான் நிர்மாணிக்க வேண்டும் என்று எவ்வளவு தகராறு நடந்தது என்பதும் தெரியும். எனவேதான் 4-வது குறுக்குத்தெரு




இவன் செய்துவிடுவான் என்கிற நம்பிக்கை.

புது ஷூ. குழந்தைகள்தான் விளையாட்டாகப் போட்டுவிட்டு மறந்திருக்க வேண்டும். அதன் அமைப்பு மிக நேர்த்தியாக இருந்தது. இவ்வளவு நேரம் தண்ணீரில் ஊறியும் கூடத் தோல் மதர்த்து விடவில்லை. திருப்பிப் பார்த்தான். நிறைய மண் சேறு.

5—வது தெரு இரண்டுக்கும் பொதுவாகச் சந்திப்பில் குழாய் போட்டார்கள்.

குழாயைச் சுற்றி சிமெண்ட்டினால் 'வரப்பு' கட்டியிருந்தார்கள். பாதை சந்திப்பு ஆனதினாலே சாக்கடை பாதைக்குக் கீழே செல்கிறது. வீணாகும் குழாய்த் தண்ணீர் பாதையில் கீழேதான் போய்ச் சேருகிறது.

தண்ணீர் தெப்பமாகத் தேங்குகிறது.

'ஏதோ அடைச்சிக்கினு இருக்குதுங்க' என்றபடி தன் கொம்பை எடுத்துத் திருப்பி வைத்து அழுத்திய போது ஏதோ பலமாக அழுத்துவதை உணர முடிந்தது. குனிந்து இடக்கையை விட்டுப் பிடிப்பில்லாமல் வழுக்கும் அந்தப் பொருளை வலுக்கொண்டு இழுத்துப் போட்டான்... சின்ன குழந்தையின் ஷூ.

''பூட்சுதானு... யாருதுங்க...'' என்று நிமிர்ந்த போது யாரையும் காணோம். செய்யச் சொல்லிவிட்டுப் போய்விட்டால் யாருடையதாக இருக்கும்?

அப்படியே அசையாமல் தூக்கி வந்து லாசரஸ் வீட்டுக்குக் கீழே சாக்கடை விளிம்பில் வைத்தான். அவன் அங்கே வருவதைப் பார்த்து லாசரஸ் கையில் புத்தகத்தோடு வந்து நின்றார்.

''சார் தண்ணி குடுங்க சார்.''

''இரு கொண்டு வரேன்.''

இந்த பூட்சு எத்தனை அழகாய் இருக்கிறது என்று வியந்தான். தன் பிள்ளைக்கும் இதே கால் அளவுதான் இருக்கும் என்பது நினைவுக்கு வந்தது.

ஒற்றை பூட்சு.

பிள்ளையை நர்சரியில் சேர்த்திருக்கிறான். இந்த ஆரணியில் ஏறி இறங்காத கடையில்லை. இவன் மனசுக்குப் பிடித்தமான பூட்சு எதுவுமே இல்லை. டீச்சரிடம் அடுத்த வாரம் போட்டு அனுப்புவதாக வாக்களித்தான்.

''தண்ணி இந்தாப்பா.''

''குடுங்க சார்.''

பிளாஸ்டிக் மக்கைக் காம்பவுண்ட் சுவர் மேல் வைத்தார். கையலம்பாமல் எங்கே போகிறான் என்று எட்டிப் பார்த்ததும், ''என்ன அது?'' என்றார்.

''பூட்சு சார், புதுசா இருக்குது.''

ஷூவை எடுத்துச் சாக்கடைக்கு நேராகப் பிடித்துக் கொண்டு அலம்பினான். லாசரஸ் அவன் பின்னால் வந்து நின்றார்.

''நமதப்பா இது, நம்ம வீட்டுது. குழந்த மார்ட்டினோடது. ஜூலி வா இங்கே. நமது தாம்பா, உன்னே கொண்டு வா.''

விநாயகம் பூட்சு முழுவதையும் தண்ணீரால் நன்றாகக் கழுவினான். மாணிக்கத்திடம் ''போய்க்கிட்டே இரு வரேன்'' என்று சொல்லிவிட்டு வீட்டுக்குள் போனான்.



**சாப்பிட வந்தவர்: ''இன்னும் கொஞ்சம் சாம்பார் ஊத்துப்பா.''**

**சர்வர்: ''மன்னிக்கணும் சார், எங்க ஹோட்டல் இட்டிலிக்கு நீச்சல் தெரியாது!''**

**- சாருபாலா கண்ணன்**

''எனக்குத் தெரியும், எனக்கு அப்பவே தெரியும்'' என்று முணு முணுத்தபடி ஜூலி வந்தாள். கையில் வாங்கிக் கொண்டாள். ''தண்ணியிலே ஊறியிருக்குதே... ஒன்னுமாகாதே' என்றாள். அவனையும் ஒருமுறை சேட்டாள். பதில் சொல்லும் முன்பாகச் சரியும் புடவைத் தலைப்பைப் பிடித்துக் கொண்டு குனிந்து, தேடி இன்னொரு ஷூவை எடுத்துப் போட்டு, இது எங்களதுதான் போய் சொல்லவில்லை என்பதுபோல 'பாரு' என்றாள்.

''சொன்னாக் கேக்கறதில்லே'' லாசரஸ் கடிந்து கொண்டார். இவனிடம் திரும்பி, ''எதிர்வீட்டுக் குழந்தை விளையாட வருது. கண்ணுக்குத் தென்படற பொருளை எடுத்துப் போடுது. நாமதான் ஜாக்கிரதையா இருக்கணும். குழந்தைசன நாம தப்புச் சொல்லக் கூடாது. வராதேன்னு சொல்ல முடியுமா?'' என்று சன்னமான குரலில் பேசினார்.

''ஆமாங்க'' என்றான்.

வேறு இங்கென்ன வேலையிருக்கிறது என்று யோசித்துக் கிளம்பினவனை லாசரஸ் அமர்த்தினார். ''உட்கார். கிறிஸ்துமஸ் பலகாரம் சாப்பிட்டுட்டுப் போகலாம்.''

''நேத்தே வந்து வாங்கிட்டோமே.''

''எல்லோரோடேயும் உன்னையும் சேர்த்துட முடியுமா?''

விநாயகம் பூரித்துப் போனான்.

''ரொம்ப உசத்தியான ஷூ. என் பெரிய மகன் வாங்கி வந்தது. இப்ப வந்தாளே ஜூலி, அவ என் கடைசிப் பெண். அவளோட குழந்தைக்குத்தான் வாங்கினான். இன்னிக்கிக் காலேல தேடினேன். கிடைக்கவேயில்லே.''

''அந்த பூட்சு எவ்வளவுங்க ஆகும்?''

அவர் விலையைச் சொன்னார்.

அவன் நினைத்ததை விட மூன்று மடங்கு அதிகம். தற்போது அவனிடம் அந்த அளவுக்கு வசதியில்லை. கொஞ்சம் முயன்று சேர்த்தால் வாங்கிவிடலாம்.

லாசரஸ் ஷூவைத் துணியால் ஈரம் போகத் துடைத்துக் கொண்டிருந்தார்.

பணம் போனால் போகிறது. இவரது பிள்ளையிடமே சொல்லி வாங்கி வரச் சொன்னால் என்ன?

''நம்ம பையனைக்கூட நர்சரியில் சேர்த்துட்டேங்க.''

''வெரிகுட்'' – சிரிக்கிறார்.

''போன வாரம் பிள்ளைக்கு பூட்சு வாங்கக் கடைக்குப் போனேங்க. இதுபோல அமைப்பா ஒரு பூட்சு கூட இல்லே.''

''இங்க நல்ல குவாலிடி கிடைக்காது. லோக்கலா பண்றதுதானே?''

''நான் கூட வாங்கணும். வெலையப்பத்தி கவலையில்லீங்க.''

''செய்'' என்றார் லாசரஸ். ''நம்ம குழந்தைக்கு நாம்தானே நல்லதாக உடுத்தணும்'' சிரித்துக் கொண்டே மேலும் ''தன்னிடத்தில் அப்பத்தைக் கேட்கிற மகனுக்குக் கல்லைக் கொடுப்பானோ? மீனைக் கேட்டால் அவனுக்குப் பாம்பைக் கொடுப்பானோ?'' என்று சொல்லும்போது இந்தச் சந்தர்ப்பத்திற்குப் பொருந்தி வராததைக் கண்டு வார்த்தைகளைப் பாதி விழுங்கினார்.

காப்பியும் கேக்கும் கொடுத்தார்கள். விநாயகம் நன்றி சொல்லிவிட்டு வெளியேறினான்.

மறுநாள் வரும்போது யாரும் எட்டிப் பார்க்கவில்லை. தன் வேலையை எப்போதும் போல நிதானமாகச் செய்து கொண்டுவரும் போது நேற்று எடுக்கப்பட்ட பூட்சுக்குள் இருந்த மண் சேறு நீண்டு கிடக்கும் கால்வாய் விளிம்பில் காய்ந்து கெட்டித்திருந்தது. அது வெறும் மணல்தான். அசுத்தம் இல்லை. என்றாலும் கூட அவன் கொஞ்ச நேரம் அதைப் பார்த்துக் கொண்டிருந்து பிறகு காலால் மெல்லத் தேய்த்துக் கெட்டித்திருந்த மணலைச் சிதைத்தான்.



# பரத நாட்டியப் பாதுகாப்புச் சட்டம்

கி. ராஜேந்திரன்

"செம்மியனே லோக் சபாவுக்கு அனுப்புங்கள்; வைஜயந்தி மாலாவை ஆர். ஆர். சபாவுக்கு அனுப்புங்கள்" என்று கிண்டலாகப் பேசிய அரசியல்வாதிகளே, வெட்கித் தலைகுனியுங்கள்! இதோ வைஜயந்திமாலா ஓர் அற்புதமான யோசனையை வெளியிட்டிருக்கிறார்! மெத்தப் படித்த தென் சென்னை வாசிகள் வைஜயந்தியைத் தேர்ந்தெடுக்காமல் விருந்திருந்தால் இந்த அபார யோசனை நாட்டுக்கும் குறிப்பாகத் தமிழகத்துக்கும் கிடைக்காமல் போய்ப் பெருநஷ்டமாகியிருக்கும்.

"பரத நாட்டியத்தில் தூய்மையைப் பாதுகாக்க அரசு சட்டம் இயற்ற வேண்டும்" என்ற வைஜயந்தியின் மகத்தான யோசனையை அரசு ஏற்றால் என்னவெல்லாம் நிகழ்ச்சிகள் தொடரும் என்பதை எண்ணிப் பார்க்கவே மெய் சிலிர்க்கிறது!

மத்திய அரசின் கலாச்சார அமைச்சரவை இந்தப் பிரமாத யோசனையை ஏற்று எந்தவிதமாகப் பரத நாட்டியத்துக்குப் பாதுகாப்புத் தரலாம் என்று ஆராய ஒரு கமிஷன் அமைக்கிறது. அதன் தலைவராக திருமதி வைஜயந்திமாலா பாலி நியமிக்கப்படுகிறார். இந்த கமிஷன் நாடு முழுதும் சென்று நடனப் பள்ளிகளுக்கு விஜயம் செய்தும் பரத நாட்டிய ஆசான்களைப் பேட்டி கண்டும் தகவல்கள் சேகரிக்கிறது. கமிஷன் அங்கத்தினர்களின் சம்பளத்துக்காகவும் விமானப் பயணத்துக்காகவும் ஐந்து நட்சத்திர ஓட்டலில் தங்கும் செலவுக்காகவும் மக்களின் வரிப்பணம் சில லட்சங்கள் ஒதுக்கப்படுகிறது. ஒரு வருஷத்தில் சமர்ப்பிக்கப் படவேண்டிய அறிக்கையை மேலும் அரை ஆண்டு அவகாசம் பெற்றுத் தயாரித்து முடிக்கிறது கமிஷன்.

இந்தச் சமயம் பார்த்து ஒரு அமைச்சரவைக் கூட்டத்தில் "தாமதங்களுக்கு இடமளிக்கக் கூடாது" என்று பிரதமர் ராஜீவ் கண்டிப்புடன் பேசவே, வேறு வழியின்றி கலாச்சார அமைச்சரவை, வைஜயந்தி மாலா கமிஷன் அறிக்கையை உடனுக்குடன் பரிசீலனைக்கு எடுத்துக் கொள்கிறது. கமிஷன் சிபாரிசுகளை அமைச்சரவை ஏற்று, பந்தநல்லூர் பாணி, வழுவூர் பாணி, தண்டாயுத பாணி பிள்ளை பாணி, கலாக்ஷேத்ரா பாணி, பத்மா சுப்பிரமணியம் பாணி என்று சில பாணிகளைத் தவிர மற்ற பாணிகளில் பரத நாட்டியம் கற்றுத் தருவதும் கற்றுக் கொள்வதும் சட்டப்படி குற்றமாகும் என்று தீர்மானித்து அபராதத் தொகைகளையும் நிர்ணயிக்கிறது. இந்த மசோதா சட்டமாக நாடாளுமன்றத்தில் சமர்ப்பிக்கப்படுகிறது.

அங்கே தி. மு. க. அங்கத்தினர் திரு. கலாநிதி, "சொர்ணமுகி பாணி எப்படி, ஏன் விடப்பட்டது? மேலும் சொர்ணமுகி தமிழக அரசவைக் கலைஞராயிற்றே?" என்று கேட்டு, "அ. தி. மு. க. அங்கத்தினர்கள் கூட இந்தப் பிரச்சினையை எழுப்பாதது






தமக்கு வியப்பளிப்பதாக''வும் கூற, ''அவர்கள் வேறு தாளத்துக்கு நடனமாடிக் கொண்டிருப்பதால் இதைக் கவனித்திருக்க முடியாது'' என்று சரண்சிங் சொல்ல, நகைச்சுவைப் பிரியரான பலராம் ஜாக்கர் சிரமப்பட்டுச் சிரிப்பை அடக்கிக் கொண்டு அ.தி.மு.க. அங்கத்தினர் ஒருவரின் ஆட்சேபணையை ஏற்கிறார்.

இந்தச் சமயத்தில் ராஜீவ் வழக்கமான பெருந்தன்மையுடன் இடையில் புகுந்து, ''எதிர்க்கட்சியினரின் கருத்துக்கு இந்த அரசு உரிய மதிப்புக் கொடுக்கும்'' என்று கூறவும் சொர்ணமுகி பாணியும் ஏற்கப்பட்டு, பலத்த கரகோஷத்துக்கிடையில் ''பரதநாட்டியப் பாதுகாப்புச் சட்டம்'' ஏகமனதாக நிறைவேறுகிறது.

இதன் விளைவாக, நாடெங்கிலும் உள்ள பரத நாட்டியப் பள்ளிகளில் எந்தெந்தப் பாணி நடனம் எவ்வாறு கற்றுத் தரப்படுகிறது என்று கண்காணிக்க 'நாட்டிய கலா இன்ஸ்பெக்டர்கள்' நியமிக்கப்பட வேண்டும் என்று திருமதி வைஜயந்தி யோசனை கூற, அத்தகைய இன்ஸ்பெக்டர் பதவிகளுக்கு விண்ணப்பங்களை வரவேற்பதாகக் கலாச்சார அமைச்சரவை நாளிதழ்களில் விளம்பரம் செய்கிறது. அதில் பிற்படுத்தப்பட்டோருக்கான ஒதுக்கீடு மறவாமல் குறிப்பிடப்படுகிறது. இதன் மூலம் வேலை வாய்ப்புகளை நாட்டில் அதிகரிக்கச் செய்ததாக வைஜயந்தியைப் பாராட்ட முன்வந்த கிழவர்களையே அங்கத்தினர்களாகக்கொண்ட ஒரு இளைஞர் சங்கம், அவருக்கு 'வேலைத் திலகம்' என்ற பட்டத்தைத்தமிழகஅமைச்சர் ஒருவரைக் கொண்டு பொதுக் கூட்டத்தில் வழங்குகிறது.

இன்ஸ்பெக்டர் பதவிக்கு விண்ணப்பித்துக் கொள்கிறவர்கள் உண்மையிலேயே பரதத்தின் பல்வேறு பாணிகளைப் பற்றி அறிந்தவர்களா என்பதனை ஆராய மறுபடி வைஜயந்தி தலைமையில் ஒரு கமிட்டி அமைக்கிறது அரசு. விண்ணப்பதாரர் பலருக்குப் பல்வேறு பாணி என்ன, பரதத்தைப் பற்றியே ஒன்றும் தெரியாது என்று முடிவெடுக்கிறது கமிட்டி. என்றாலும் மலைக்கவில்லை வைஜயந்திமாலா. அவரது அடுத்த யோசனைக்கிணங்க, ''பரதநாட்டியக் கலை இன்ஸ்பெக்டர்கள் பயிற்சிக் கல்லூரி'' ஒன்று நிறுவி, அதற்கு வைஜயந்தியையே முதல்வராக்குகிறது கலாச்சார அமைச்சரவை. ''இந்தக் கல்லூரிக்கென்று கட்டிடம் கட்டத் தமிழக அரசு ஆவன செய்யும்'' என்று தமிழக முதல்வர் அறிவித்து, அண்ணா நாமம் வாழச் செய்கிறார். சென்னையில் ஆளுனர் மாளிகையையொட்டிய விசாலமான அரசினர் வனத்தின் ஒரு பெரும் பகுதி இதற்கென ஒதுக்கப்பட்டு அங்குள்ள மரங்கள் வெட்டப்படுகின்றன. புல்டோஸர் சத்தத்தில் மான்கள் மிரண்டு ஓடுகின்றன. மக்கள் வரிப்பணத்தைச் சில பல கோடி விழுங்கிக் கொண்டு கட்டிடம் உருவாகிறது.

இதற்கிடையில், ''பயிற்சிக் கல்லூரிக் கட்டிடமே உருவாகுமுன் வைஜயந்தியை முதல்வராக நியமித்துச் சம்பளம் தருவது ஏன்?'' என்று நாடாளுமன்றத்தில் தமிழகத்தைச் சுவீகரித்துக் கொண்ட ஒரு தெலுங்குதேச எம். பி. வினா எழுப்ப, ''நாட்டியக் கலை இன்ஸ்பெக்டர்கள் பயிற்சிக் கல் ரூரியின் அமைப்பு, நாட்டியக்கலைப்பயிற்சிக்கு ஏற்ற விதமாக அமைய வைஜயந்தி மேற்பார்வை இட வேண்டியிருப்பதால் அவருக்கு அதற்காகச் சம்பளம் தருவதில் தவறில்லை'' என்று நிதி அமைச்சர் கேள்வி நேரத்தில் பதிலளிக்கிறார்.

கட்டிடம் பாதி எழும்பியதும் இந்தச் சட்டத்தால் பாதிப்புக்குள்ளான இதர பாணி நடனக் கலைஞர்கள் சிலர் சேர்ந்து வழக்குத் தொடுக்கிறார்கள். ''நாட்டியக் கலையை இப்படித்தான் பயிலலாம் இப்படி ஆடக் கூடாது என்று சட்டமியற்றுவது கலைஞர்களின் அடிப்படை உரிமையைப் பறிப்பதாகும்; கலை வளர்ச்சிக்கு முட்டுக்கட்டை போடுவதாகும்; கலையில் புதிய பரிசோதனைகளை நிகழ்த்துவதைத் தடுக்க அரசுக்கு உரிமை இல்லை'' என்று உயர் நீதிமன்றத்தில் மனுச் செய்து 'ஸ்டே ஆர்டர்' பெறுகிறார்கள். கட்டிடம் பாதியில் நின்று விட காண்ட்ராக்டர் தலையில் துண்டைப் போட்டுக் கொண்டு சோகமே உருவாக உட்கார்கிறார்.

வழக்கு தொடர்கிறது. முதல் நாளன்றே அரசுத் தரப்பு வழக்கறிஞர், ''கனம் நீதிபதி அவர்களுக்குப் பரதநாட்டியத்தின் நுணுக்கங்கள் எந்த அளவுக்குத் தெரியும்?'' என்ற

''மேல்சபை என்று எதற்கு வீணுக?'' என்று ஜார்ஜ் வாஷிங்டனிடம் ஜெபர்ஸன் ஒருமுறை கேட்டாராம். அந்தச் சமயத்தில் இருவருக்கும் காப்பி வந்தது. ஜெபர்ஸன் தமது கோப்பையிலிருந்த காப்பியை ஆற்றுவதற்காக ஸாஸரில் ஊற்றினுர். உடனே வாஷிங்டன் ''காப்பியை எதற்காக ஸாஸரில் ஊற்றினீர்கள்? அது ஸாஸரில் சிறிதுநேரம் இருந்தால் ஆறும் என்றுதானே? மேல்சபை அமைப்பதன் நோக்கமும் இதுதான்! இயற்றிய சட்டத்தை மேல்சபையில் சிறிது நேரம் ஆறப்போடுவதற்காகத்தான். அதற்குள் உணர்ச்சிகள் ஆறி சட்டம் சிறந்ததுதானு எனச் சிந்தனைத் தெளிவு பிறக்கும்'' என்றார்.

தகவல்: ஜா. ரவி.

ஆதாரம்: நமது அரசியல் அமைப்பு



சந்தேகத்தைக் கிளப்ப, நீதிபதி கடும் கோபத்துடன் ''உம்மைவிட எனக்கு அதிகம் தெரியும்; என்றாலும் இந்தப் பிரச்சினையை நீர் கிளப்பி விட்டதால் இந்த வழக்கை விசாரிக்க வேறு நீதிபதியை நியமிக்குமாறு பிரதம நீதிபதிக்குச் சிபாரிசு செய்கிறேன்'' என்று கூறி எழுந்து போய் விடுகிறார். மேலும் சில கால தாமதத்துக்குப் பிறகு, பரத நாட்டியத்தில் தேர்ச்சி இல்லாவிட்டாலும் ஆர்வம் உடைய ஒருவரைத் தேடிப் பிடித்து வழக்கை விசாரிக்க நியமிக்கிறார் பிரதம நீதிபதி.

சட்டத்தை எதிர்த்து வழக்குப் போட்ட வாதிகளின் வக்கீல், ''வஞ்சிக்கோட்டை வாலிபனில் வைஜயந்திமாலா ஆடியது பரதம்தான் என்றால் அது எந்த பாணியைச் சேர்ந்தது? ராஜ்கபூருடன் சேர்ந்து மலைமுகட்டிலிருந்து பனிச்சரிவில் உருண்டது பரதத்தில் எந்த வகை?'' என்று ஒரு இரட்டைக் கேள்வியை ஒரே சமயத்தில் எழுப்ப, அரசுத் தரப்பு வக்கீல் துள்ளி எழுந்து, ''மை லார்ட்! இது வழக்குக்குச் சம்பந்தமில்லாத விஷயம்'' என்கிறார். ''ஆட்சேபணையை ஏற்கிறேன்'' என்று உத்தரவிடுகிறார் நீதிபதி.

வாதியின் வக்கீல், ''மை லார்ட் தங்கள் விதிமுறையை ஏற்கும் அதேநேரத்தில், வாழ்க்கை என்ற சினிமாவில் மாராப்பு மார்பை மறைக்காமல் நடனமாடி பிறருக்கு வழிகாட்டிய நட்சத்திரம் தான் இன்று பரத நாட்டியத்தின் தூய்மை பற்றிப் பேசுகிறார் என்று கட்டிக்காட்டுவதற்கு அதிகமாக எனக்கு வேறு உள்நோக்கம் ஏதுமில்லை'' என்று பணிவது போல் பாய்கிறார். அரசுத் தரப்பு வக்கீல் இதையும் ஆட்சேபிக்க, நீதிபதி அதையும் ஏற்று, வாதியின் வழக்கறிஞரைக் கடுமையாக எச்சரிக்க, அவர் புன்னகையுடன் ஏற்கிறார். வழக்கு பல நாட்கள், வாரங்கள், மாதங்கள் என்று இழுத்தடித்துக் கொண்டு போகிறது.

இதற்கிடையில் அடுத்த பொதுத்தேர்தல் வந்துவிட, சினிமாவில் மவுசு இழந்த அனுராதா தென் சென்னையில் இ. காங்கிரஸ் வேட்பாளராய் நின்று ஜனதா செழியனைத் தோற்கடித்து எம். பி. ஆகிறார். பதவிப்பிரமாணம் ஏற்ற சில நாட்களில் அவர் அதி அற்புதமான ஒரு கருத்தை வெளியிடுகிறார். 'சினிமாவில் நைட் கிளப் நடனங்களின் தரம் குறைந்து படுமோசமாகவும் ஆபாசமாகவும் மாறி வருகிறது; எனவே நாம் ஆடிக் கொண்டிருந்த போது இருந்த அளவில் நைட்கிளப் நடனங்களின் தூய்மையைப் பாதுகாத்து அதன் கௌரவத்தை நிலைநாட்ட அரசாங்கம் சட்டம் இயற்ற வேண்டும்' என்பதே அந்த அபார யோசனை!

இதைக் கேட்டதும் மின்சாரம் பாய்ந்தது போல் நாடெங்கும் ஒரு புத்துணர்ச்சி பரவுகிறது. ''அடடா! இப்படிப்பட்ட எம். பிக்களைப் பெற நாம் என்ன பாக்கியம் செய்தோமோ?'' என்று வாக்காளப் பெருமக்கள் பூரித்துப் போகிறார்கள்!

# பதித பாவன ராமஃ மான ரக்ஷண க்ருஷ்ண

**ரா. கணபதி**

**சா**ந்தம் பூத்த சந்திப் பொழுது. சுடு வெயில் அடங்கும் வேளையில் தக்ஷிணேச்வரத் தவநிதியின் ஸந்நிதியில் அச்சாந்தம் மும்மடங்காய் மலர்ந்திருந்தது.

அலையெறியாது பாயும் தெளிந்யான கங்கையில் பரம ஹம்ஸம் இறகசைக்காமல் மிதந்து கொண்டிருந்தது.

பக்தியில் தோய்ந்த அதன் இனிய மோனம் உடனிருந்த சில அடியார் மீது பனி நீரில் தோய்ந்த மஸ்லின் சால்வையாகப் படிந்து கிடந்தது.

வேலைக்காரி மெல்லவந்து தூபமிட்டாள். மென் மணம் மோன கானத்துக்கு சுருதி கூட்டியது.

அடுத்து வந்தாள் இன்னொருத்தி —இன்னுத ஒருத்தி.

இனிய தூபத்தோடு கரிப்புகையாக இவளுமா வரவேண்டுமென அடியார்கள் எண்ணியிருக்கலாம்.

தக்ஷிணேச்வர ஆலயம் எடுத்த ராஸமணி குடும்பத்தில் ஆதி காலத்தில் பணி மகளாயிருந்து. இன்று கிழவியாகி விட்டவள் அவள். எனினும் அவளுடைய பூர்வ கதை இன்னமும் உலகுக்கு மறந்துவிடவில்லை. எத்துணைக் காலமானாலும் தூய்மைக் குறைவான விஷயங்களை உலகால் மறக்க முடிவதில்லையே!

பானகம் பருகுகையில் அதில் ஒரு சிறு துரும்பு நெஞ்சிலே குத்துகிறாற் போல, அம்பிகையின் அருளமுதைப் பருகிக் கொண்டிருக்கும் நித்ய பாலர் ராமக்ருஷ்ணரை இவள் நெருஞ்சிமுள்ளாக நெருடிவிடப் போகிறாளே என்று அடியார்களுக்கு அச்சம் ஏற்பட்டிருந்தால் அது நியாயமே.

அவரோ? தன்னைக் குடைய வரும் மரங்கொத்தியையும் மட்டை அசைத்து வரவேற்கும் தென்னையாக இருந்தார்.

'வேசியிடமும் என் ஸர்வேசியையே பார்க்கிறேன்' என்றவர் அவர். பகவதி என்று பெயருள்ள இந்த மாதையும் அவர் மாதா பகவதியாகவேதான் பார்த்தார் போலும்.

எட்ட நின்றே அவரை வணங்கிய அவளை, ''வாம்மா, உட்காரம்மா'' என்று பரிவோடு வரவேற்றார், உட்கார வைத்தார்.

நைந்த ஸல்லாச் சால்வைக்குப் பதில் குத்திப் புழுக்கும் கம்பளிப் போர்வையாக வந்தவளிடம் காசிப் பட்டாகக் குழைந்து உரையாடலானார் குருமஹராஜ். அவளை இழிவாக நினைப்போரின் கருத்தில் அவளை உயர்த்த வேண்டும் என்று உத்தேசித்தவர் போலப் பேசலானார்.

''உனக்கு ரொம்ப வயஸாயிண்டு வரதே அம்மா! வைஷ்ணவாளுக்கும், மத்த ஸாதுக்களுக்கும் பிக்ஷை, கிக்ஷை பண்ணிண்டு இருக்கியா?'' என்று விசாரித்தார்.

(வங்காளத்தில் நிறைய உள்ள ஸ்ரீசைதன்ய மஹாப்ரபுவின் அடியார்களை அங்கு 'வைஷ்ணவர்' என்று குறிப்பிடுவார்கள்.)

பாகவதர்களுக்குப் பகவதி பிக்ஷா கைங்கரியம் செய்கிறாளென்று ஸ்ரீராமக்ருஷ்ணர் தெரிந்து வைத்துக் கொண்டேதான், பிறருக்கு அது தெரிய வேண்டுமென்பதற்காக இப்படிக் கேள்வி கேட்கிறாரென்று அவருடைய குரலிலிருந்தே புரிந்துவிட்டது.

பகவதி புத்திசாலினி. எனவே, பழிக்குரிய தனக்கு அவர் புகழ் ஸம்பாதித்துத் தர இருக்கும் இப்போது அடக்க குணம் காட்டிப் புகழை மேலும் பெருக்கிக் கொள்ள எண்ணினாள்.

எனவே அவர் கேட்டதற்கு, ''ஆமாம்'' என்று பதில் சொல்லாமல், ''அதை எப்படிங்க நானே சொல்லிக்கறது?'' என்றாள், நாணல் — கோணல் சிரிப்புடன்.

அதை குருமஹராஜ் ரஸித்திருக்க வேண்டும். எனவே, தொடர்ந்து, ''ப்ருந்தாவனம், காசி முதலான ஸ்தலங்களுக்செல்லாம் க்ஷேத்ராடனம் செஞ்சிருக்கியோல்லியோ?'' என்று, முன்போலவே 'ஆமாம்'— விடையை உன்னி தேக்கி வினா விடுத்தார்.

அவளும் ஸாமர்த்தியத்தைத் தொடர்ந்தாள். ''ஆமா''மை அப்பட்டமாக அவிழ்த்து விடாமல், உடம்பையெல்லாம் கூனிக் குறுக்கிக் கொண்டு, ''என்னமாங்க நானே சொல்லிக்கிறது?''. என்று எதிர்க் கேள்வி கேட்டாள்.

தான் சென்ற க்ஷேத்ரங்களில் செய்த சாச்வத தர்மங்களைப் பற்றியும் டாகுர் ஸ்ரீ ராமக்ருஷ்ணர் அறிந்திருப்பார்; எனவே அடுத்து அதையும் கேள்வி ரூபத்தில் வெளியிடுவாரென்று பகவதி எதிர்பார்த்திருக்க வேண்டும்.

ஆனால் டாகுர் கேட்கக் காணோம்.

புகழ் அரிப்பு யாரை விட்டது? அதனால், ''எப்படிங்க நானே சொல்லிக்கறது?'' என்று இவ்விஷயத்தை விட்டுவிடாமல் பகவதியே ஆரம்பித்தாள்: ''காசியிலே நாம் பனே கூட ஒரு படித்துறை கட்டியிருக்கோமுங்க...!''

''அடேடே!'' என்று அதை ஆர்வத்தோடு கேட்டு ஆர்ப்பரித்தார், குழந்தையின் 'பிரதாப'த்தைக் கேட்டுத் தட்டிக் கொடுக்கும் அம்மையப்பர்.

''ஆமாமுங்க! படித்துறையில் நம்ப பேரைக் கூடச் செதுக்கி வைச்சிருக்காங்கோ!''

குருமஹராஜ் பொன் முகத்தில் புன்னகை படர; ''பேஷ், பேஷ்!'' போட்டார்.

'தன்னையும் மநுஷியாக மதிப்பார்களா?' என்று பின்தங்கி நின்றவளின் புகழாசை ஓங்கி ஓங்கி, 'தான்' நன்றாகத் தலைக்கேறி விட்டது. ''ஆமாங்கோ ஸ்வாமி! கங்கா கட்டத்திலே 'ஸ்ரீமதி பகவதி தாஸி'ன்னு நம்ப பேரை நல்லாக் கல்லாலே பொறிச்சு வைச்சிருக்குங்கோ'' என்றாள்.

''பலே, பலே'' என்று மந்தஹாஸம் செய்தார் மதுரவிஷமர்! எத்தனை சமர்த்தையும் அசடாக்கிவிடும்தமது மஹா மாதாவான மஹாமாயாவுக்குத்தான் 'பலே' போட்டாரோ என்னவோ?

'தான் இனி இழிவுக்குரியவளல்ல; பெருமைக்குரிய புண்யசாலினியாகத் தன்னைக் காட்டிக் கொண்டாயிற்று' என்ற எண்ணம் பகவதியின் தலைக்கேறி விட்டது.

அவ்வளவுதான்! குருமஹராஜை மிகவும் நெருங்கிச் சடேரென்று அவரது பாதங்களையே தொட்டு நமஸ்கரித்து விட்டாள்.

உட்குருத்தையும் குடைந்து கொண்டு மரம்கொத்தி தென்னையை ஆழக் குத்தி விட்டது!

குருமஹராஜின் திருவுடல் என்பதை ஒரு அற்புதப் புதிராகப் படைத்திருந்தாள் பராசக்தி. பக்குவர்களையும், பக்குவம் பெற விழைபவர்களையும் அவர் தீண்டிவிட்டாலே போதும், அவர்களுள் ஆன்மீக — தெய்வீக மின்ஸாரம் பாய்ந்துவிடும். அதே திருமேனியைப் பதிதர் தீண்டிவிட்டாலோ அவரது உடலுள் அவர்களது பாப சர்பம் மின்ஸாரமாகப் பாய்ந்து அவரைப் பதற அடித்துவிடும்.

இன்று அப்படித்தான் நடந்தது.

பகவதி பரமஹம்ஸரைத் தீண்டியதுதான் தாமதம், பாம்பு தீண்டினாற்போல பதைத்தெழுந்தார் அவர். ''கோவிந்தா, கோவிந்தா!'' என்று அலறியவாறு அறையின் மூலைக்கு ஓடினார். அங்கு ஜாடியிலிருந்த கங்கா தீர்த்தத்தைப் பாதத்தில் கொட்டிக் கொண்டு, அங்கே படிந்துவிட்ட பாதகத்தைக் கழுவி விட்டார்.

''கோவிந்த! புண்டரீகாக்ஷ! ரக்ஷ மாம் சரணாகதாம்!'' என்று பாஞ்சாலி அலறிய போதே பரமாத்மா அவளது துகிலை வளரச் செய்து மான ஸம்ரக்ஷணம் புரிந்தான்.

இன்று பரமஹம்ஸர் அதே கோவிந்த நாமம் கூறி அழைத்த போது,

பகவதியின் மானம்....?

அவளை இழிந்தவளென அடியார்கள் அவமானம் செய்யக் கூடாதென்றே அவளுடைய தெய்வத் தொண்டுகளை குருமஹராஜ் வெளிப்படுத்தி பகுமானம் செய்ய



எண்ணியும் முடிவிலே ஏன் இப்படித் தலை கீழாக வேண்டும்?

ஆம், தலை தாழ்ந்து கீழே அவன் தாளைத் தொடத்தான் வேண்டும். அல்லாமற் போனால் தொண்டும் கூட அஹந்தையைத் தான் கொழுக்கச் செய்யும். அவதார புருஷர்கள் அதற்கு இடம் தர முடியாது. அதன் தலையில் ஒரு போடு போட்டேனும் இறக்குவதே அவதாரப் பணி. பாஞ்சாலிக்குத் துகிலளித்த முகில் வண்ணனே, அஹங்கரித்து ஆடையின்றி நீராடிய ஆய்மகளிரின் ஆடைகளைக் கவர்ந்து அவர்கள் மானுபிமானம் விட்டுத் தன்னைச் சரண் செய்ய வைத்தவனல்லவோ? அவதாரத்தின் உச்சப்பணி ஒரு ஜீவன் மான, அவமான, அபிமான, அஹங்கார உடுப்புக்களையெல்லாம் களைந்து தன்னுடைய குழந்தைத் தூய்மையுடன் நிற்குமாறு செய்வதுதான்.

ராமக்ருஷ்ண அவதாரத்திலோ ஒரு விசேஷம். ஒரு ஜீவன் மானுபிமானம் விட்டுத் தானாக நிற்கத் துணிய விடாமல் அதன் பாப கர்மா தடுக்கும் போது அவரே அந்தப் பாப கர்மாவை வாங்கிக் கொள்வதுண்டு. அந்தப் பரமத் தியாகத்தைத்தான் அவர் இன்றும் செய்தார். பகவதியின் பாபச் சுமையே தம்மைத் தாக்கித் தவிப்புறுத்தச் செய்தார். இம்மாதிரி ஒருமுறை ஓர் அடியாரின் பாபத்தில் ஒரு பகுதியை அவர் வாங்கிக் கொண்டு தீர்ப்பதே பிற்பாடு அவர்கள் மானுபிமானம் விட்டுத் தங்களைப் பரிசுத்தி செய்து கொள்வதற்குப் பெரிய தூண்டுகோலாகி விடும்.

பகவதியின் பாபத்தில் ஒரு பகுதியைக் கழுவியபின் பரமஹம்ஸர் தன்னியல்பான தண்புனலாகக் குளிர்ந்தார். இனிமையாய்ப் பேச ஆரம்பித்துச் சூழலின் இறுக்கத்தை இளக்கத் தொடங்கினார்.

''கல்யாணம் ஆனா எனக்கு ஒரு தோஷம் போயிடும்னு ஜோசியர் சொல்லியிருக்கார்.''
''என்ன தோஷம்?''
''சந்தோஷம்.''

—ஜெயின் சேகர்.



குன்றிச் சவமாக உட்கார்ந்து விட்ட பகவதிக் குழந்தை இனி இங்கே வராமலே இருந்து விடுமோ என்று எண்ணி ஒரு தாயின் பரிவுடன் அவளிடம் கூறினார்: ''வந்து கொண்டிரு அம்மா! ஆனால் கொஞ்சம் தள்ளியிருந்தே நமஸ்காரம் பண்ணு. அதுவே போறும்.''

இப்படிச் சொல்வதும் பிழையை அம்பலப் படுத்துவதாகத்தான் இருக்கிறது. 'பேச்சு என்றால் இப்படித்தான் இருக்கும். தனி மனிதர்களைத் தொடர்புறுத்தும் பேச்சில் தனி மனித அவலங்கள் சேரத்தான் சேரும். விச்வ உணர்வையே தழுவும் கானம்தான் எந்த அவலமும் சேராதது. அதுவே இப்போது இக்குழந்தைக்கு இன்மருந்தாகும்' என்று கருதினார் அனுதாப அவதாரர்.

''கொஞ்சம் பாடறேன், கேளு'' என்று கொஞ்சும் குழந்தையாக அவளிடம் கூறித் தமது சிறிய கட்டிலில் அமர்ந்தார்.

ஆதி பகவதியின் அன்பிலே சிக்கி, அழகிலே சொக்கி, அமுதாய் இசைத்தார்:

கருந்தா மரையாம் காளிப தந்தனில்
பொருந்திய தெல்றன் புந்தித் தேனீ

மேலும் பாடினார், பாபத்தின் பாழ் கதிக்குப் பரிதவித்துப் பாடினார்:

காற்று டியெனஎன் கருத்து காத்யாயனி
பதவிணை நோக்கிப் பறந்திட, அந்தோ!
ஆற்று வேகச் சூறு வளியாய்
பாபச் சுமையதைப் பார்மிசை சாய்த்தது.

பின்னரும் பாடினார்— பாபம் தொடாப் பாவன பரம்பொருள் நம்முள்ளேயே நலமுறக் குலவுவதைக் காட்டி:

விரும்பிய யாவும் விருந்திடு வேந்தன்
இரும்புபொன் செய்யும் இரச வாதி—யுன்
இருதய குகையினுள் இரத்தின மாக
இருப்ப துணர்வாய்; உன்கி உன்னுளே!

எந்த ஞானோபதேசமும் செய்ய முடியாததை கானம் செய்து விட்டது. மான அவமானங்களுக்கு அப்பாற்பட்ட வான விசாலத்தைப் பகவதியின் மீதும், மற்ற பாகவதர் மீதும் விரித்து விட்டது ஹம்ஸ கீதம், பரம ஹம்ஸ கீதம்.

★

''ராமனாகவும் கிருஷ்ணனாகவும் எவன் இருந்தானோ, அவனே ராமகிருஷ்ணனாக இவ்விடத்தில் இருக்கிறான்'' என்று எளிமையின் எல்லை நிலமான ஸ்ரீராமகிருஷ்ணரே தம்மை விவேகாநந்தருக்குத் தெரிவித்துக் கொண்டதுண்டு. பழைய அவதாரங்களில் ஒரு புதுமை கூடினால்தானே புதிய அவதாரம் ருசிக்கும்? பதித பாவன ராமன் அஹல்யையின் பாவத்தை ஸங்கல்ப மாத்திரத்தில் போக்கினாலும் புது அவதாரத்தில் பதிதரின் பாவத்தைத் தானே வாங்கித் தீர்ப்பதாய் விளையாடினான். த்ரௌபதி மான ஸம்ரக்ஷகன் புது அவதாரத்தில் மானம் காத்தவருக்கே மானம் நீத்த மாண்பு நிலைக்கும் வழிகாட்டினான்.

(21.2.1985 ஸ்ரீராமகிருஷ்ணஜெயந்தி.)

# களுக்! களுக்!



ஓவியர் பிகாஸோ தம் நண்பர் ஒருவரிடம் பேசிக் கொண்டே படம் வரைந்து கொண்டிருந்தார். எதிர்பாராவண்ணம், கைதவறி 'வண்ணம்' முழுவதும் நண்பரின் சட்டையில் கொட்டிவிட்டது.

பிகாஸோ மிகவும் வருத்தப்பட்டுக் கொண்டிருந்தபோது, ''பரவாயில்லை. இந்தச் சட்டையில் உங்கள் கையொப்பத்தைப் போட்டுத் தாருங்கள். விற்றுக் காசாக்கிக் கொள்கிறேன்!'' என்று அந்த நண்பர் சொன்னார்!

தகவல்: புதுவை நித்திலன்.




தாய்லாந்திலுள்ள பௌத்த பிட்சுகள் பணத்தைக் கையால் தொடுவதில்லை. கடைகளில் சாமான்கள் வாங்கும்போது பணம் அடங்கிய 'பர்ஸ்'ஸை கடைக்காரரிடமே கொடுத்து அவருக்குரிய பணத்தை எடுத்துக் கொள்ளச் சொல்கிறார்கள். கடைக்காரர் தங்களுக்குச் சேர வேண்டிய பணத்தை எடுத்துக் கொண்டு மீதிப் பணத்தை பர்ஸிலேயே வைத்து பிட்சுகளிடம் கொடுத்து விடுகின்றனர். காரணம்? புத்தமதக் கோட்பாடுகளின்படி பிட்சுகள் பணத்தைத் தொடக்கூடாது!

தகவல்: மாணமதுரை ஜலால்.



இங்கிலாந்தைச் சேர்ந்த 'ஸ்டோர்பிரிட்ஜ்' என்ற ஊரைச் சேர்ந்த ஒரு பெண் விவாகரத்துக் கோரியிருக்கிறாள்! இவள் கூறியுள்ள காரணம் விநோதமானது!

இவளது கணவன் கிரிக்கெட் 'ஸ்கோர்' குறிப்பவர். அதனால் கிரிக்கெட் சம்பந்தப்பட்ட எல்லாப் புள்ளி விவரங்களும் இவருக்கு அத்துப்படியாம்! ஆனால், மனைவியின் பிறந்த நாளை மறந்துவிடுவாராம்! இதைத் தாங்க முடியாமல்தான் இவர் மனைவி விவாகரத்து கோருகிறார்!

—சம்பத்குமாரி.

ஆதாரம்: மிர்ரர்.



கனடாவின் கவர்னர் ஜெனரலாக மாற்றலாகிச் சென்ற ''லார்டு வில்லிங்டன்'' அவர்களிடம், ''இங்குள்ள பிரெஞ்சு பேசும் கனடா மக்கள் தங்கள் பெயரைத் தவறுதலாக யாரும் உச்சரித்தால் மிகவும் கோபப்படுவார்கள்'' எனக் காரியதரிசி கூறினார்.

அதற்கு, லார்டு வில்லிங்டன், ''நான் தமிழ் பேசப்படும் ராஜதானியின் கவர்னராக ஐந்து ஆண்டுக் காலம் இருந்திருக்கிறேன். எனவே இவ்வுலகில் நான் உச்சரிக்க முடியாத பெயரே இருக்க முடியாது'' எனப் பதிலளித்தார்!

—புதுவை நித்திலன்.

# 2 மலையாளம்;



அவ்வப்போது அண்டை மாநிலங்களில் எப்படி படம் பண்ணுகிறார்கள் என்ற ஆவல் தலைதூக்குவதால்-

இந்த வாரத்தில் இரண்டு மலையாளப் படங்கள். முதலில் -

## பாவம் க்ரூரன்

ஒரு அப்பாவியை ஆசைகாட்டிப் படுக்கைக்கு அழைக்கும் ஒரு பணச்செழிப்புள்ள பதினேழு. அப்புறம் அந்த அப்பாவியை உதற, அந்த அப்பாவி அபாய பாவியாகி ஊரில் இருக்கும் பதினேழுகளை எல்லாம் மிகக் க்ரூரமாகக் கொல்லும் கதை. அந்த அப்பாவி கம் — வெறியன் என்ன மாதிரி எல்லாம் ஆட்டம் போடுகிறான். கடைசியில் எப்படி — வேண்டாம் அது சஸ்பென்ஸ்.

அப்பாவியாக டி. ஜி. ரவி. அந்த ரோலுக்காகவே அவதரித்த மாதிரி முக, உடல் வாகு. வெறி வந்து யானை பலம் பெற்று எப்படி மூச்சிரைக்க நெருங்குகிறார்.

ஒரு பக்கத்திலிருந்து பார்த்தால் லேசாகச் செப்பு ரோஜாக்களின் வாசனை வீசினாலுங் கூட, கதை மிக அழகாகச் சொல்லப்பட்டிருப்பதற்காகவே பார்க்கலாம். இதில், இதயத்தைத் திக்திக் என்று பெரிதாக அடித்துக் கொள்ளச் செய்யும் பல இடங்களில், நாங்கள் பேடிச்சி போயி ஸாரே! (பேடிச்சி — பயந்து).

'குண்டு குண்டுன்னு சொல்லி குழந்தை பென்ஸில் போல ஆயிட்டா!' 'அதானே. ஐம்பது இலோ பென்ஸில்!' என்று ரசிக்கும்படி வசனங்கள்.

டைரக்டர் ராஜசேனனும். நமக்குத் தெரியாது. இருந்தாலும், சலிப்புத் தட்டாமல் கதையைச் சொல்லிக் கொண்டு போய், கடைசிக் காட்சிகள் நெருங்க நெருங்க நாற்காலி முனையில் உட்காரவைத்து. 'அப்புறம் என்ன?' 'அப்புறம் என்ன?' என்று கேட்க வைத்திருப்பதற்காகவே தேடிப் பிடித்துப் பாராட்டலாம்.

## ஸ்போடனம்

இன்னொரு மலையாளப்படம். செப்பு வர்ணம் பூசியது. அதாவது புரட்சி பேசும் தொழிலாளி — முதலாளி சண்டைப்படம்.

வழக்கம்போல்தான். .செய்யாத கொலைக்காக ஓடும் தொழிலாள இளைஞர்கள். அடுத்தவன் மனைவியை ஆட்சி செய்யும் முதலாளி. கடையியில் முதலாளி இறக்கிறார். கதாநாயகன் போலீஸில் சிக்குகிறான். தொழிலாளர் லீடர் கொல்லப்படுகிறார். கதாநாயகனின் மச்சினர் கொல்லப்படுகிறார். பறவைகளைச் சுடுகிற மாதிரி இதில் துப்பாக்கியால் மனிதர்களைச் சுடுகிறார்கள்.

கொஞ்சம் ஆவேசப்படம் என்றாலுங் கூட:—



# 1 தமிழ்

'கார் குழலில் பூச்சூடிய கருத்த பெண்ணே', பாடல் ரீங்காரம் இடுகிறது இன்னும்! அரையிருளில் மௌனமாக அடிக்கும் அலை, ஒரு கவிதையாய்த் தெரிகிறது இன்னும்! அந்த நீளமான குருப் சண்டை — வெகு இயல்பாகத் தெரிகிறது இன்னும்!

டைட்டில் ஓடும்போதே தெரிந்து விடுகிறது, இசைக்கு நம் ஊர் சங்கர்—கணேஷ் பார்ட்டி என்று.

கேரளாவின் இயற்கையைக் காமிரா தாகம் தீரக் குடித்திருக்கிறது.

### தமிழ் பக்கம் ஒரு பார்வை

## மண்ணுக்கேத்த பொண்ணு

புது டைரக்டர், அவ்வளவுதான்.

புதுப்படம் என்று சொல்லலாமா என்று பார்த்தால்—

புதிய வார்ப்புகள், கிழக்கே போகும் ரயில் எல்லாம் நினைவுக்கு வருவதால் கதையை விட்டுவிடலாம்.

படித்த இளவரசி பான்ட் கிழிந்த விவகாரத்தைக் காந்திமதி காதில் ரகசியமாய் ஓத, காந்திமதி 'பான்ட் கிளிஞ்சி போச்சாம்' என்று மைக் வைக்காத குறையாய்ப் பிரகடனப்படுத்துவதும் சரி.





'அவ கூட நெருங்கிப் பழகணும்னு ஒரே வழிதான் இருக்கு' என்று ஜனகராஜ் சொல்ல, சந்திரசேகர் 'என்ன, என்ன?' என்று ஆவலோடு கேட்க, 'அவங்க வீட்ல நீ வண்டி ஓட்டணும்' என்று உடைக்கிறாரே அந்த இடமும் சரி, ரசிக்கலாம்.

சரியான சிரிப்புப் பட்டாளம், இந்தக் கவுண்டமணி, செந்தில் கம்பெனி. செந்திலுக்கு கருங்குரங்கு கஷாயத்தைக் கொடுப்பதும், (வாயில், புனல் வழியாக) செந்தில் குடித்துவிட்டு நாட்பட, நாட்பட சேஷ்டைகளுடன் குதிப்பதும், 'இப்பல்லாம் யாருக்காவது ஏதாவது போசணும் போல இருக்கே' என்பதும், பழங்காலத்து நகைச்சுவைதான் என்றாலுங்கூட கிச்சுக் கிச்சு மூட்டுகிறதென்றால் கவுண்டமணிதான் காரணம்.

சந்திரசேகர் மைனர் வில்லன். ஜனகராஜும், அவருமாய்த் திட்டம் போடுவது தான் ஜோர். அப்புறம் போர். சந்திரசேகர் நன்றாக நடித்தாலும் காரெக்டர் ஒட்டவில்லையே!

வினு சக்கரவர்த்தி பரவாயில்லை. படம் என்று ஒன்று இருந்தால் க. நாயகன், க. நாயகி என்று இருவர் வேண்டும். பாண்டியன், இளவரசி தான் அது என்று சொல்கிறார்கள். பரண்மேல் இளவரசியும், பாண்டியனும். கீழே காந்திமதியும் வினு சக்ரவர்த்தியும். கொஞ்சம் எல்லை மீறின காட்சி.

சங்கீத கங்கை அமரன். பெண்களின் 'லொல, லொல' நாக்கசைப்பு முதற் கொண்டு அப்படியே அண்ணனை மானசீகக் குருவாக ஏற்றுக் கொண்டிருக்கிறார் போல.

இளமை இருக்கிறது. துள்ளல் இருக்கிறது. ஹம்மிங்குடன் பாட்டு இருக்கிறது.

மற்றவை கான மயிலாட தான்.

— ஜெயமன்மதன்

✖ சிதம்பரத்தில் பாதிக்கப்பட்ட பகுதி




**(நடுக் கடலில் தீ விபத்துக்குள்ளான சிதம்பரம் கப்பலில் பயணம் செய்த மலேஷியநாட்டுத் தமிழ் இளைஞர் அப்துல் லத்தீப்பைச் சந்தித்தபோது....)**

பினங்கிலிருந்து புறப்பட்ட சிதம்பரம் அடுத்த இரண்டு நாட்கள் எந்தக் கோளாறுமின்றி ஒழுங்காகச் சென்று கொண்டிருந்தது. 12–ம் தேதி மதியம் 2 மணி இருக்கும். லத்தீப் முதல் வகுப்பு அறையொன்றில் வேறு பலருடன் வீடியோவில் ஆங்கிலப் படம் பார்த்துக் கொண்டிருந்தார். திடீரெனத் தீப்பிடித்ததைக் குறிப்பிடும் அலாரம் அலறியது. அலறிப் புடைத்துக் கொண்டு அவரவர் இடத்தை நோக்கி ஓடினார்கள்.

கிட்டத்தட்ட 40 000 மதிக்கத்தக்க பொருட்களைத் தீயில் இழந்து விட்டுக் கட்டிய லுங்கியுடனும், சட்டையுடனும் இருக்கும் லத்தீப் சொல்கிறார்: ''நான் தங்கியிருந்த இடம் 'பங்க்' என்று சொல்லப்படும் மூன்றாம் வகுப்புப் பகுதி. அது கப்பலின் கீழ்த் தளத்தில் இருந்தது. அவசரமாக ஓடிவந்து என் அறையில் நுழைய முயன்ற போது குப்பென்று கிளம்பிய புகை அறையையே அடைத்துக் கொண்டிருந்தது. புகையை விலக்கிக் கொண்டு உள்ளே செல்ல முயன்ற போது என்னைப் பலர் தடுத்தார்கள். ஏற்கெனவே பலர் அந்தப் புகையில் மாட்டிக்கொண்டு தீக்காயங்களில் இறந்து விட்டதாகவும், உயிரைக் காப்பாற்றிக் கொள்ள வேண்டுமென்றால், பொருட்களை இழக்கத்தான் வேண்டும் என்றும் கூறி என்னை 'டெக்' கிற்கு அழைத்துச் சென்றார்கள். அதற்குள் டெக்கில் 360 பேர் சேர்ந்து விட்டார்கள். கலவரம் எல்லோர் முகத்திலும் தாண்டவமாடியது. நடுக்கடலிலேயே எல்லோரும், சாக வேண்டியதுதானா? பிரயாணிகள் பலர் கடலில் குதிப்பதற்குத் தயாராக உயிர் காப்பு வளையத்தை மாட்டிக் கொண்டு நடுக்கத்துடன் நின்று கொண்டிருந்தார்கள். உயிர் காப்பு வளையத்திற்கும் பஞ்சம். சிலருக்குக் கிடைக்கவே இல்லை. தீ, மேலும்,

மேலும் பரவ, நேரமோ ஓடிக் கொண்டிருந்தது. கடலிலிருந்து ஸ்விம்மிங் பூலுக்குத் தண்ணீரை எடுத்து வந்து, அதிலிருந்து 'பைப்'களைக் கொண்டு நெருப்பை அணைக்கப் போராடினர்கள், கப்பல் அலுவலர்கள். நிறைய பிரயாணிகளும் உதவி செய்தார்கள். ஆனல் தண்ணீர் அடிக்கும் அந்த பைப்கள் மிகவும் பழசாக இருந்ததால், நைந்து, நைந்து பிய்ந்து போயின. 12-ம் தேதி இரவு முழுவதும் கப்பலில் ஒரு பகுதி எரிந்து கொண்டே இருந்தது. கப்பல் நகராமல் ஓரிடத்தில் நிறுத்தி வைக்கப்பட்டது. நடுக்கடலில் கும்மிருட்டில், காற்றில் தனது கங்குகளைப் பரப்பவிட்டுக் கொண்டிருந்த தீயைப் பார்த்த எங்களுக்குப் பயம் பந்தாய்க் கழுத்தில் நின்றது. இதற்குள் கப்பலில் வதந்திகள் பரவ ஆரம்பித்தன. 100 பேர் இறந்துவிட்டதாகவும், கப்பல் சற்று நேரத்தில் மூழ்கப் போவதாகவும்... இப்படிப் பல. ஆனல் காப்டன் ஆனந்த் சற்றுக் கூடப் பதற்றமில்லாமல் 'ரஷ்யக் கப்பல்கள் உதவிக்கு வருகின்றன; பயப்பட வேண்டாம்' என்று தைரியத்தைக் கொடுத்துக் கொண்டிருந்தார். ஆனல் எந்தக் கப்பலும் வருவதாகக் காணேம். ஒருவழியாக 13-ம் தேதி காலே 5 மணிக்குத் தீயை அணைத்தோம். இதற்குள் தீயை அணைப்பதற்காக உபயோகப்படுத்தப்பட்ட தண்ணீர் கப்பலின் ஒரு பகுதியில் சேர்ந்துவிட்டு, வெளியேருமல் தேங்கி விட்டதால் கப்பல் ஒரு பக்கம் லேசாகச் சாய்ந்து விட்டது. சாய்ந்த நிலேயிலேயே மெதுவாகப் புறப்பட்டு 14-ந் தேதி அதிகாலேயில் சென்னே வந்து சேர்ந்தது.''



✖ அப்துல் லத்தீப்

லத்தீப்பின் அறையில் அவருடன் இன்னும் மூன்று பேர்கள் இருந்தார்களாம். பொருட்களே மீட்டுவர வேண்டுமென்ற ஆசையில், தீயை மீறிக் கொண்டு உள்ளே சென்றதில் அவர்கள் இறந்து போனர்களாம். லத்தீப்பிற்கு இது இரண்டாவது கடல் பயணம். 1981-ல் இதே சிதம்பரத்தில் ஒரு முறை பயணித்திருக்கிருராம். ''அப்போது இருந்த கவனிப்பு, வசதிகள் இப்போது இந்தக் கப்பலில் இல்லே. மிகவும் மோசமாக வைத்து இருக்கிருர்கள்'' — என்கிருர் லத்தீப். இறந்து போனவர்கள் 70 பேருக்கு மேல் இருக்கலாம் என்றும் அவர் கூறுகிருர்.

தனது கல்யாணத்துக்காகவும் — தனது தங்கையின் கல்யாணத்துக்காகவும் கொண்டு வந்த துணிமணிகள் தீயில் நாசமாய்ப் போனதை நினைத்து வருந்திக் கொண்டிருக்கிருர் லத்தீப். முதல் வகுப்பு, இரண்டாம் வகுப்புப் பிரயாணிகளே இந்தத் தீ விபத்து பாதிக்கவில்லேயாம்.

''கப்பலில் முழு அளவு பிரயாணிகள் எண்ணிக்கை இல்லாததால், இறந்தவர்கள் எண்ணிக்கை குறைவாக இருக்கிறது. 1200 பேர் பயணம் செய்யக் கூடிய இந்தக் கப்பலில் அன்று 700 பேர்கள்தான் இருந்தார்கள்'' என்கிருர் லத்தீப்.

**சிதம்பரத்தைப் பற்றி சின்னக் குறிப்பு:—**

17226 டன் எடையுள்ள இந்தக் கப்பல் ஷிப்பிங் கார்ப்பரேஷனுக்குச் சொந்தமானது. 19 ஆண்டுகளுக்கு முன்னர் பிரான்ஸ் நாட்டில் இருந்து வாங்கப்பட்ட இந்தக் கப்பல் 15 கோடி ரூபாய்க்கு இன்சூர் செய்யப்பட்டுள்ளது. இந்த ஜூலே மாதத்தோடு இந்தக் கப்பலே நிறுத்திவிட்டு



✖ காப்டன் ஆனந்த்

வேறு புதிய கப்பல் விடுவதாக இருந்தார்களாம். இதனலேயே அடிக்கடி ஏற்பட்ட சின்னச் சின்ன ரிப்பேர்களேச் செய்யாமல் இருந்தார்களாம். அதனல் இந்தத் தீ விபத்தைத் துரிதமாகக் கட்டுப்படுத்த முடியாமல் போயிருக்கலாம் என்கிருர்கள் துறைமுகத்தில் பணிபுரியும் சிலர்.

-ப்ரியன்

படங்கள்: 'சுபா' எட்வர்ட்

● வி. ரவிகுமார், லால்குடி.
? இத்தனை கேள்விகள் கேட்டு என் நேரத்தை வீணடித்து விட்டாயே என்று என்னைப் பார்த்து முணுமுணுப்பீர்களா?
! இன்னஸ் புத்தகத்தில்மிக அதிகமான கேள்விகள் கேட்டவன் என்ற முறையில் இடம் பெற வேண்டும் என்பது 225 கேள்விகள் எழுதி அனுப்பிய உங்கள் விருப்பமாக இருக்கலாம். அதற்கு இன்னும் நீங்கள் ரொம்ப தூரம் போக வேண்டும். 1001 கேள்விகள் கேட்டு ஏற்கெனவே ஒருவர் ரிகார்டு ஏற்படுத்தி யிருப்பதாய் அறிகிறேன். என்னைப் பொறுத்தமட்டில் ஒரு வேண்டுகோள்: கொஞ்சம் யோசித்துக் கேள்விகளை எழுப் புங்கள். இருவர் நேரமும் மிச்சப்படும்.

● சாரதாப் பிரியன், ஈரோடு.
? ஒரு நடிகனுக்கு அழகு தேவையா? அறிவு தேவையா? அதிர்ஷ்டம் தேவையா?

# நீங்கள் கேட்டவை
## தராசு

! உலகப்புகழ் எட்வர்ட் ஜி. ராபின்ஸனுக்கு என்ன அழகு இருந்தது? அறிவாளியாக இல்லாத போதிலும் புகழின் உச்சியில் உள்ள நடிகர்கள் பலரை நாம் அறி வோம்! அதிர்ஷ்டம் மட்டும் ஒருவனை நடிகனுக்கி விடாது. ஆக நடிகனுக்குத் தேவை இம்மூன்றும் அல்ல. நடிப்பாற் றல்தான் தேவை.

● எஸ். ஏ. கோவிந்தகுமார், நீடாமங்கலம்.
? துன்பத்துக்குக் காரணம் ஆசை, சரி; ஆசையை ஒழிப்பது எப்படி?
! மனசை அடக்குவதன் மூலம். மனசை அடக்குவது எப்படி? ஆசையை ஒழிப் பதன் மூலம்!

● ஆர். பூபாலன், கிருஷ்ணகிரி.
? என். டி. ஆர். மூன்று தொகுதிகளில் போட்டியிடுவதன் காரணம் தோற்றுவிடுவோம் என்ற பயத்தாலா?
! கரையோர ஆந்திரா, தெலுங்கானா, ராயலசீமை. பகுதி மக்களின் ஆதரவு தனக்கு உண்டு என்பதை நிரூபிக்க மூன்று தொகுதிகளில் நிற்பதாக அவர் கூறியுள்ளார். ஆந்திராவின் சில பகுதி களை அவர் கவனிக்கவில்லை என்பதான குற்றச்சாட்டுக்குப் பதிலாகக் கொள்ள லாம்.



● நியூயார்க் தமிழர்

● த. சத்தியநாராயணன், அயன்புரம்.
? கல்கியில் கல்கரூர் எழுத்தை வெளியிடுவீரா?
! காத்திருக்கிறோம்.

● எஸ். இராமநாதன், அருப்புக்கோட்டை.
? அண்மையில் காலமான ஜேம்ஸ் ஹாட்லி சேஸ் குறித்து...?
! அவரை நம்பி வாழ்ந்த தமிழ் எழுத் தாளர் சிலருக்குப் பெருநஷ்டம்.

● குமரிஜெஜு, சென்னை–5.
? ஜெயலலிதாவைப் பார்த்தால் உங்களுக்குப் பாவமாக இல்லையா?
! ஊஹூம். நான் அவருக்காகப் பரிதாபப் படப்போய்க் கடைசியில் அதற்காக என்னைப் பார்த்துப் பரிதாபப்படும் நிலைக்கு அவர் உயர்ந்து விட்டால்...!

● ஜெ. முகமது ஃபாரூக், நெல்லிக்குப்பம்.
? யாருடைய பயணக் கட்டுரை உங்களைக் கவர்ந் தது?
! என்னை மட்டுமென்ன? தமிழில் இன்று பயணக்கட்டுரை எழுதுவோர் எல்லோ ருமே தங்களைக் கவர்ந்தது ''கல்கி''யின் எழுத்து என்றுதான் சொல்கிறார்கள்.

● ஜி. ராஜசேகர், வலங்கை.
? தன்னைத்தானே உயர்வாக நினைக்கும் மனிதர் களைப் பற்றி என்ன நினைக்கிறீர்கள்?
! தன்னம்பிக்கை வேறு, தற்பெருமை வேறு, மண்டைக்கனம் வேறு – முதல் பகுதியினரைப் போற்றுவேன், இரண் டாவது பகுதியினரைப் பொறுப்பேன், மூன்றாவது பகுதியினரை வெறுப்பேன்.

● ஆர்.கே. லிங்கேசன், மேலக்கிருஷ்ணன்புதூர்.★
? எம். ஜி. ஆரை அவரது தர்மம் தான் காப்பாற்றி யது என்கிறேன் – தாங்கள்?
! இதற்கு நான் பதில் கூறுவதைவிட அவருக்குச் சிகிச்சை அளித்த டாக்டர் ஸ்ரீபாத ராவ் அவர்களையே பதிலளிக்கக்

# ஜெயலலிதாவைப் பார்த்தால்



○ ஆண்டவன் அருள்

கோருகிறேன். கூறுகிறார் ஸ்ரீபாதராவ்: ''நானும் எத்தனையோ மாற்றுச் சிறுநீரகங்கள் பொருத்தி இருக்கிறேன்... ஆனால் எம். ஜி. ஆர். விஷயம்...! ஓ! தன் முழு சுயநினைவு இல்லாத நிலையில் அமெரிக்கா அழைத்துச் செல்லப்பட்டு இப்படி முழுமையாய்த் திரும்பிவரச் செய்தது... மருத்துவ சாதனை மட்டுமில்லை; ஆண்டவன் அருளும் கூடத்தான் என்று முழுமையாக நம்புகிறேன்... என்ன ஒரு பிரமிக்கத் தக்க முன்னேற்றம்! அவர் சிகரெட் பிடிக்க மாட்டார், மது அருந்த மாட்டார், ஏன் காப்பி கூடக் குடிக்க மாட்டார் என்பார்கள். அதனாலும் பிரச்னைகள் வெகுவாகக் குறைந்தன... இன்னொரு மருத்துவமனையிலிருந்து எம். ஜி. ஆரைச் சோதிக்க வந்த ஒரு நிபுணர், ஹீ ஈஸ் டு யங் ஃபார் ஹிஸ் ஏஜ் என்று அறிவித்தார்...''

மிஸ்டர் லிங்கேசன்! தர்மம் தலைகாத்திருக்கிறது; மக்களின் மனப்பூர்வமான பிரார்த்தனையும் பலனளித்திருக்கிறது.

○ எஸ். தேவராஜு, வஞ்சூர் கிராமம்

? புளூ ஃபிலிம் பார்த்ததுண்டா?

! இல்லை. ஆனால் சமீபத்தில் ஒரு செய்தி படித்ததுண்டு. குஜராத் ஜாம் நகரில் ஒரு டி. வி. மெகானிக் தம் வீட்டு டி. வி.யைச் சரிபார்த்துக் கொண்டிருக்கும்போது சேனல் மூன்றுக்குத் திருப்பத் திடும்மென்று புளூ ஃபிலிம் வந்ததாம். பக்கத்தில் அம்மாவும், சகோதரியும் இருந்ததால் பாவம், அவசரமாக அணைத்து விட்டாராம்! ஜாம் நகரில் பல பேருக்கு இதே அனுபவம் ஏற்பட்டதாம். வியந்தவர் பலர், ரசித்தவர் சிலர்! எப்படி நேர்ந்தது இது? அருகே வால்சூராவில் கப்பற்படைப் பயிற்சி தளம் உள்ளது. அங்கே அவர்களுடைய தனி டிரான்ஸ்மிட்டரில் ஒலிபரப்பப்பட்டது தான் ஜாம் நகரிலும் அதிர்ஷ்டக்காரர்களுக்குத் தெரிய வந்தது என்கிறார்கள். நீங்கள் கவலைப்பட வேண்டாம். ''யூ'': ''ஏ'' போல 'எஸ்' சர்ட்டிஃபிகேட் என்ற புதியதொரு சர்ட்டிஃபிகேட்டின் கீழ் ஆபாசப் படங்கள் தாராளமாகவே பகிரங்கமாகத் தியேட்டரில் காண்பிக்கப்படும் காலம் நெருங்கிவிட்டது என்கிறது இன்னொரு செய்தி. பாரதத்தின் முன்னேற்றம் எவ்வளவு வேகமாக நிகழ்கிறது! ஜெய்ஹிந்த்!

○ எம். சம்பத், வேலாயுதம்பாளையம்.

? 'புயல் கடந்த பூமி' நம்மாளு, 'அந்தஸ்து' சஞ்சீவி – ஒப்பிடவும்.

! புயலில், காந்தியம் கதர் அது இது என்று பேசிவிட்டுக் கடைசியில் சொந்தக் குடும்பம் என்கிற சின்ன வட்டத்துக்குள்ளேயே சடுகுடு ஆடுகிறவர் நம்மாளு. அந்தஸ்து சஞ்சீவி அப்படியெல்லாம் சொல்லாமல் பரோபகாரி மாதிரி காட்சி அளித்தாலும் அவரும் இன்னொரு நம்மாளுதான். நடிப்பில் நம்மாளுதான் நம்மாளு!

○ குருசரண், மருளிப்பட்டினம்.

? பால்டிமூர் தமிழ்ச் சங்கத்தின் தலைவர் பழனி பெரியசாமியைச் சந்தித்தீர்களா?

! ஓ. யெஸ்! விசித்திரமான ஒரு தகவலும் தெரிய வந்தது. அவர் அப்பா (வயது 105!) இறந்துவிடவே ஊருக்கு வந்திருந்தார் பெரியசாமி. எல்லாம் முடிந்து நியூயார்க் திரும்பும்போதுதான் எம். ஜி. ஆர். அப்போலோவில் அனுமதிக்கப்பட்டார். அவரைச் சந்திக்க முயன்றார். முடியவில்லை! அவர் விரைவில் குணமடையப் பிரார்த்திப்பதாய்ச் சென்னையிலிருந்தே ஒரு தந்தி கொடுத்துவிட்டு, 'அவசியமெனில் அமெரிக்கா அழைத்து வரவும். எல்லா ஏற்பாடுகளையும் நாங்கள் கவனிக்கிறோம்' என்று தகவலும் அனுப்பிவிட்டு அமெரிக்கா திரும்பிவிட்டார். போய்ச் சேர்ந்து சில நாட்களில் அமைச்சர் பொன்னையனிடமிருந்து ஃபோன் வந்தது. உடனே டாக்டர் குழு சென்னை வர ஏற்பாடு செய்தார்! பாருங்கள், இதையெல்லாம் தான் தெய்வச் செயல் என்று கருதி நெகிழ்கிறோம். பழனி பெரியசாமி, அமெரிக்காவில் பொருளாதாரப் பேராசிரியர் மட்டுமல்ல, ஹோட்டல் நடத்துகிறார், பிஸினஸ் கன்ஸல்ட்டண்ட்டாகவும் இருக்கிறார்!

★ ரூ. 10 பரிசு பெறுபவர்:
ஆர். கே. லிங்கேசன்,
மேலக்கிருஷ்ணன்புதூர்,
பள்ளம் அஞ்சல், குமரி மா. வ.

# பாவமாக இல்லையா?



# ஹைதராபாத் ஹீரோ

பிப்ரவரி 6ந்தேதி. ஹைதராபாத் விமான நிலையம்.

மாடி, பால்கனி, லவுன்ஜ் வெளியே என்று பார்க்கும் இடமெங்கும் நீக்கமற நிறைந்த மனிதத் தலைகள். அப்படிச் சொல்வதை விட விமான நிலையத்திற்குள் மனித சமுத்திரம் புகுந்து விட்டது என்று கூறலாம். இத்தனைக்கும் டெல்லியிலிருந்து வருவது அரசியல்வாதி அல்ல. இரண்டு நாள் கழித்து 22 வயது நிரம்பப் போகும் கிரிக்கெட் வீரர் அஸாருதீன். முதல் மூன்று டெஸ்ட்களில் மூன்று சதம் தொடர்ந்து போட்டு உலகப் புகழ் பெற்ற ஹைதராபாத் ஹீரோ.

விமான நிலையத்தில் வரவேற்பு வளையங்கள், வருகை அட்டைகள். ஜிந்தாபாத் கோஷங்கள். 'அஸார் உன்னைக் கண்டு பெருமைப்படுகிறோம்' எனப் பெருமித அலை பாயும் துணி பானர்கள்.

ஏர் பஸ் வந்து நின்றதும் இதர பிரயாணிகள் கிரிக்கெட் நாயகனுக்கு வழிவிட்டு ஒதுங்கினர். கீழே உற்சாக வெறி உள்ள கூட்டத்தின் ஜே கோஷம். படியிலிருந்து இறங்கியதும் தாயார் ஸால்தானு மகனை அணைத்து முத்தமிட்டுக் கண்ணீர் மல்கினாள். தந்தை அஸீஸ் உதீன் முகத்தில் பெருமிதம்.

லவுன்ஜில் நுழைந்ததும் ஒரே அமளி. நூற்றுக்கணக்கான மாலைகள். நெருக்கும் கூட்டத்தில் மாலையிட முடியாமல் கையில் ஏந்தித் திரும்பியவர்கள் பலர். மனித அலையைச் சமாளிப்பது போலீஸிற்குப் பெரும்பாடாக இருந்தது. அஸார் 'வி.ஐ.பி. வரவேற்பு' மேடையை அணுகவே முடியவில்லை. ஆந்திர அரசு மேல்சபைத் தலைவர் ஸையத் ஷா, தெலுங்கு தேசம் இளைஞர் கரியதரிசி பெய்க், ஸ்டேட் பாங்க் ஆப் இந்தியா அதிகாரிகள்... இவர்கள் மாலையிட மட்டும்தான் முடிந்தது. இளைஞர்கள் அஸாரைத் தோளில் தூக்கி ஆடத் தொடங்கினர். எங்கும் கரையற்ற உற்சாகம். அஸார் கூச்சப்பட்டார். ஆனால் ஒன்றும் தடுப்பதற்கில்லை.

மறக்க முடியாத ஊர்வலம். சீருடை அணிந்த குதிரை போலீஸ் வீரர்கள் முன்வர, மேளதாளம் ஒலிக்க, ஜிந்தாபாத் வானைப் பிளக்க, இருசக்கர வண்டிகள்பின் தொடர, ஜீப் ஊர்வலம் நகர்ந்தது. இளம் பெண்களின் சந்தோஷ ஆரவாரம். திடீரென்று புகழ் வெளிச்சத்தில் குதித்துவிட்ட இளைஞன் அஸார் கூட்டத்தில் திணறினான். ஒவ்வொருவரும் தன் வீட்டுப் பிள்ளை வெற்றி பெற்றது போல் முகமலர்ந்தனர்.

● ● ●

இந்தியா – இங்கிலாந்து அணி மோதிய கான்பூர் டெஸ்டில் அஸாருதீன் 98 ரன் எடுத்து முதல் நாள் ஆட்டம் முடிந்திருந்தது. அன்று இரவு உலகமெல்லாம் கிரிக்கெட் ரசிகர்கள் தூங்கவே இல்லை. பாரத உப ஜனாதிபதி திரு. வெங்கட்ராமன் உட்பட.

அஸாரின் பெற்றோர் நடுத்தர வர்க்கத்தினர். ஹைதராபாத் விட்டல் வாடியில் வசிக்கின்றனர். (தமிழர்கள் ஆதியில் குடியேறிய இடம் இது. இங்குள்ள தென்னிந்திய பஜனை சமாஜம் முதன்மையானது.) அஸார் தந்தை அஸீஸ் உதீன் மின் வாரியத்தில் கணக்கு அதிகாரி. அஸார் சேர்த்து 4 பையன்கள்; இரண்டு பெண்கள். தாய் ஸல்தானு. யாவரும் தங்கள் வீட்டில் அமர்ந்து கருப்பு – வெள்ளை டி. வி. பார்க்கின்றனர். நெஞ்சில் கவலை, ஆர்வம்...! நீல் ஃபாஸ்ட்டர் வீசிய பந்தை ஸ்கொயர் –

⌘ மகத்தான ஊர்வலம்



⌘ பீகம் விமான நிலையத்தில் ஜன சமுத்திரம்

**அச்சா அஸார்!**



செல்லப்பேரனுக்கு பாட்டியின் அன்பளிப்பு



அஸார் குடும்பம்

லெக்கில் இரண்டு ரன்களாகத் திருப்பிய போது — ஸ்கோர் 101 ஆகியது. கிரிக்கெட் விசிறிகளின் உற்சாகம் கரை மீறியது. தெருவெல்லாம் 'ஓ'வென்று சத்தம். தாய் சுல்தானா கண்களில் ஆனந்த நீர் பனிக்க, தரையில் விழுந்து வணங்கி (ஸஜ்பீ) இறைவனுக்கு நன்றி கூறினர். 'எல்லாம் குதாவின் அருள்' என்றார். (விண்வெளி வீரர் ராகேஷ் சர்மாவின் தாயும் 'இறைவன் கருணை' என்றே கூறினர்.)

'எனது கிரிக்கெட் ஆர்வத்திற்கு வித்திட்டவர் எனது தாத்தா வஜீர் உதீன்' என்கிறார் அஸார். மாஜி பள்ளி ஆசிரியரான தாத்தா வீட்டிலே 9 வயது வரை அஸார் வளர்ந்தார். மாமா ஜைனுல் அபிதீன் (ஹைதராபாத் ஸ்டேட் லெவல் கிரிக்கெட் ஆட்டக்காரர்) அவனை மேலும் உருவாக்கியவர்.

75–76–ல் அஸார் பந்து வீச்சாளராகவே ஆரம்பித்தார். லெக் ஸ்பின்னர். பிறகு மீடியம் — பேஸ் பவுலர். பிறகுதான் மட்டையாளராக ஆடத் துவங்கினர். 1977–ல் தேசிய காம்பிற்கு அவரைத் தேர்ந்தெடுத்தவர் லாலா அமர்நாத்.

ஹைதராபாத் கிரிக்கெட் சங்க மான்சிங் முதல் டெஸ்ட்டில் அஸார் சதம் போடுவதை விரும்பவில்லை. ஏனெனில் முதல் டெஸ்ட்டில் சதம் போட்டு ஓ' ஹோ என ஆடியவர்கள் பிறகு சோபிப்பதில்லை. விசுவநாத் ஒருவர்தான் விதிவிலக்கு. அடுத்த ஸெஞ்சுரி அவர் 12–வது டெஸ்டில் போட்டார்... நல்லவேளை எனது மூட எதிர்பார்ப்பு பொய்த்து விட்டது அஸாரைப் பொறுத்த வரையில்...!' என்று பெருமூச்சு விடுகிறார் மான்சிங்.

ஸ்டேட் பாங்க் ஆப் இந்தியாவில் பட்டதாரி ஆகுமுன்னே ஸ்போர்ட்ஸ் கோட்டாவில் குமாஸ்தாவாகச் சேர்ந்த அஸார் இரண்டாவது சதம் எடுத்த பிறகு ஆபீஸராக உயர்த்தப்பட்டார். (பாவம் ரயில்வே உஷா!)

கோச் ரெஹ்மான்பெய்க்: போதிப்பதைக் கிரகிப்பதில் அஸார் சிங்கம். அவனுக்கென ஒரு தனி ஸ்டைல் உண்டு' என்று பாராட்டுகிறார். டெஸ்டில் ஆடும் வரை அஸார் டெஸ்ட் மாட்ச் பார்த்ததே இல்லையாம்! 'கிரக் சேப்பல் போல் விளையாடுகிறேன் என்று விசிறிகள் கூறுகிறார்கள். ஆனால் அவர் ஆடி நான் பார்த்ததில்லை' என்கிறார் அஸார். ஆச்சர்யமாயில்லை!

— கட்டுரை: சுபஸ்ரீ

புகைப்படங்கள், உதவி:

நியூஸ் டைம், ஹைதராபாத்.

நோ ப்ளேஸ் பிளீஸ்



# அது என்ன திறந்த பல்கலைக் கழகம்?



○ திருமதி காதிர்

திறந்த வெளி அரங்கு. திறந்தவெளி சிறைச்சாலை மாதிரி இது என்ன புதுசாகத் திறந்த பல்கலைக் கழகம்?' என்ற கேள்வி எழுந்தது—

சென்னைப் பல்கலைக்கழகத் துணைவேந்தர் திரு. பி. பி. சுந்தரேசன், இப்பல்கலைக்கழகத்தில் திறந்த பல்கலைக்கழக முறை அறிமுகப்படுத்தப்படும் என்று சொன்ன போது.

''ஓப்பன் யூனிவர்ஸிடியாமே அப்படியென்றால்?'' என்று எதிராஜ் கல்லூரி முதல்வர் **திருமதி காதிர்** அவர்களைக் கேட்டதும் அவர் கூறினார்:

இந்த முறை சென்னை பல்கலைக்கழகத்தில் இனிமேல்தான் அறிமுகப்படுத்தபடவிருக்கிறது என்றாலும் ஆந்திரா, மைசூர் போன்ற பல பல்கலைக்கழகங்களில் ஏற்கெனவே நடைமுறையில் உள்ளதுதான். முதன் முதலில் அமுல் படுத்தப்பட்டது ஆக்ஸ்போர்டு பல்கலைக்கழகத்தில். கல்லூரிக்குச் சென்று படிக்க முடியாதவர்களுக்குத் தபால் வழி கல்வி முறை இருப்பது போல் இது இன்னொரு முறை. அவரவரும் ஸிலபஸ் மட்டும் பெற்றுக் கொண்டு தாங்களே முயன்று படித்துப் பரீட்சை எழுதித் தேர்வடைந்து பட்டம் பெறலாம். அஞ்சல் வழிப் பாடங்களைப் பெறவேண்டிய அவசியம் கூட இல்லை.

குறைந்த பட்ச வயது மட்டும் நிர்ணயித்திருப்பார்கள். பொதுவாகக் குறைந்தபட்ச கல்வித் தகுதி நிர்ணயிக்கப்படுவதில்லை. ஆனால் சில பல்கலைக்கழகங்களில் குறைந்த பட்சம் மெட்ரிக் தேறியிருக்க வேண்டும் என்று விதிமுறை இருக்கும். அதுவும் இல்லாதவர்கள் பல்கலைக்கழகம் நடத்தும் ஒரு தகுதித் தேர்வில் தேறவேண்டும் என்ற நிபந்தனை இருக்கும்.

வயது ஒரு பொருட்டில்லை, படிக்க முடியும், தேற முடியும் என்கிற தன்னம்பிக்கை உள்ள வயதானவர்களுக்கு இது ஒரு வசதியான முறை.

ஒரு விஷயம் தெரியுமா? சமூக சேவகி திருமதி சரோஜினி வரதப்பன், மைசூர் பல்கலைக் கழகத்தின் ஓப்பன் யூனிவர்ஸிடியில் எம்.ஏ. பொலிடிகல் ஸயன்ஸ் முதல் வகுப்பில் தேறியவர்!

ஆக, திறந்த பல்கலைக்கழகமானாலும் திறமை மிக்கவர்களை உருவாக்க முடியும் என்று தெரிகிறது!

தகவல் தொகுப்பு: **எஸ். சந்திரமௌலி**

---

குடும்பக்கட்டுப்பாடு அதிகாரி: ''இனிய வாழ்க்கைக்கு இரண்டே போதுமே?''
அவன்: ''நீங்க சொன்னாலும் — சொல்லாவிட்டாலும் மூன்றாவது மனைவியைக் கொண்டுவரும் எண்ணமே எனக்குக் கிடையாது!''

எஸ். என். மாடசாமி.



Printed by V. Murali and Published by V. Vaidyanathan on behalf of Messrs Bharathan Publications Private Ltd. at the Bharathan Press, Race Course Road, Guindy, Madras-600032. (Phone: 431543)

Assistant Editor: P. S. Mani

Editor: K. Rajendran

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Sri Lanka

# நறுமணத்துடன் புது மலர்ச்சிதரும் அந்த முதற் காப்பியின் சுவை...

## ...நாளில் எந்நேரத்திலும்.

ஆஹா! ஒவ்வொரு நாளையும் எத்தனை சிறப்பாக தொடங்கலாம். அம்மா தயாரித்த அந்த புத்துயிரூட்டும் அருமையான முதற் காப்பியுடன்! ஈடு இணையற்ற அந்த கமகமவென்ற மணம் மற்றும் முழுமையான சுவைதரும் நிறைவு...உங்களுக்கு புத்துணர்ச்சியூட்டி, புலன்களைத் தட்டியெழுப்பும் அதன் மகிமை!

காலங்காலமாய் ஒரு சிறந்த எடுத்துக் காட்டு மாதிரி இருக்கும் அந்த காப்பியே எங்களையும் ஸன்ரைஸை தயாரிக்க ஊக்கமளித்தது.

**ஸன்ரைஸ். சிறந்த காப்பிக்கு ஒரு நற்சான்று.**

அம்மா தயாரிக்கும் காப்பி போலவே தயாரிக்கப்பட்டது ஸன்ரைஸ். புது மலர்ச்சியளிக்கும் அந்த முதற் காப்பியை எந்நேரத்திலும் விரும்பும் காப்பி அன்பர்களுக்காக. அந்த முதற் காப்பியின் நறுமணத்தையும், சுவையையும் எந்நேரத்திலும் நீங்கள் வேண்டும் போதெல்லாம் அளிக்கும் ஒரு சிறந்த காப்பி-சிக்கரி கலவை.




**Nestlé ஸன்ரைஸ்**

**இன்ஸ்டன்ட் காப்பி-சிக்கரி ப்ளெண்ட்**

**அம்மாவின் காலை காப்பியின் புத்துணர்ச்சியூட்டும் நறுமணத்துடன்.**